

# ஸ்ரீ ஸதாசிவ ப்ரும்மேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள் விஜயம்


போலகம் சாஸ்த்ரரத்னாகர

ஸ்ரீராம சாஸ்திரிகள்








ஸ்ரீ காமகோடி ப்ரதீபம் வெளியீடு—1

॥ श्रीः ॥

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# ஸ்ரீ ஸதாசிவ ப்ரும்மேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள் விஜயம்

போலகம் சாஸ்த்ரரத்னகர
ஸ்ரீராம சாஸ்திரிகள்

*சென்னை சர்வ கலாசாலை ஸம்ஸ்கிருத பேராசிரியர்*
டாக்டர். வே. ராகவன்
*அவர்களின் முன்னுரையுடன் கூடியது*



ஸ்ரீ காமகோடி ப்ரதீபம் வெளியீடு
4, *பிரான்ஸிஸ் ஜோஸப் தெரு, சென்னை*-1.
1961

## முன்னுரை

தென்னிந்திய சரித்ர வரலாற்றை விரிவாய் சமீபத்தில் எழுதிய சரித்ரப் பேராசிரியர் ஸ்ரீ நீலகண்ட சாஸ்திரிகள் தம் நூலில் (பக்கம் 440) ஸ்ரீ ஆதிசங்கரர் இந்தியாவின் பலவிடங்களில் பல மடங்களை ஏற்படுத்தினர், அவற்றுள் ப்ரபலமாய்த் தெரிந்தவை சிருங்கேரி, த்வாரகை, பதரிநாத், பூரி, காஞ்சீ என்ற இடங்களிலுள்ளவை என்று எழுதியிருக்கிறார்.[1] இப்படி ஆதிசங்கரரால் ஏற்படுத்தப்பட்ட ப்ரபல காஞ்சீ காமகோடி பீடத்தை அலங்கரித்த பரமஹம்ஸர்கள் பலர். அவர்களுள் 57-வது பீடாதிபதியாயிருந்தவர் ஸ்ரீ பரம சிவேந்த்ர ஸரஸ்வதீ. இந்த ஆசார்யபாதர்களிடம் சிஷ்யராயிருந்தவரே இந்த நூலில் சிறப்பிக்கப்படும் **ஸ்ரீ ஸதாசிவ ப்ரம்மேந்த்ர ஸரஸ்வதீ.**

பரமசிவேந்த்ரர் பீடாதிபதியாயிருந்ததோடு, அத்வைத நூல்களை இயற்றிய ஆசிரியராயுமிருந்தார். இவர் தம் நூல்களில் தம்மை 'ஸரஸ்வதீ' என்றோ, பீடாதிபதி என்றோ சொல்லிக் கொள்ளவில்லை, இவர் முக்ய சிஷ்யரான ஸதாசிவ ப்ரம்மேந்த்ரர்களும் தம் நூல்களில் தம் குருவை அவ்வாறு குறிக்கவில்லை என்றும் சிலர் சொல்லுகிறார்கள். இவர்கள் புதிதாய் எழுப்பும் இக்கருத்தின்படி பரம சிவேந்த்ரர் பீடாதிபதியல்ல. பெரும்பாலும் ஸம்ப்ரதாயமாய் பீடாதிபதியாக இருந்தவர்களோ, இப் பீடங்களில் முதன் முதலாய் ஏற்பட்ட அதிபதிகளான பகவத்பாதரின்

---

1. A History of South India by K. A. N. Sastri, Oxford University Press: "....and founded a number of *Mathas* in Different parts of India, the best known being those at Sringeri, Dwaraka, Badarinath, Puri and Kanchi."

முதல் சிஷ்யர்களோ, தம் நூல்களில் தம்மை அவ்வாறு சொல்லிக்கொள்ளவில்லை. ஏராளமான நூல்களை ஆக்கிய வரும் பீடாதிபதியுமாய் இருந்தவரென நம்பிப் போற்றப் படும் வித்யாரண்யரும், இப்படி ஒரு இடத்தில்கூட தன்னைச் சொல்லிக்கொள்ளவில்லை. அவர் காலத்திலேயே அவர் உள்பட விஜயநகர ஸாம்ராஜ்யத்தைச் சார்ந்த பலரைக் கண்கூடாக வர்ணிக்கும் **விருபாக்ஷ வஸந்தோத்ஸவசம்பூவில்** கூட வித்யாரண்யரை வர்ணிக்கும் இடத்தில் இவ்வகையான பீடத்தொடர்பொன்றும் பேசப்படவில்லை.[1] 'பரமசிவேந்த்ரர்' என்றே 'ஸரஸ்வதி' பட்டம் இல்லாமல் இவர் பேசப்படு கிறார் என்பது ஸரியல்ல. இவர் இயற்றிய நூல்களின் சுவடிகளைப் பார்த்தால் இது புலனாகும். இச் சுவடிகள் இன்று நேற்று எழுதிவைத்தவை அல்ல. உதாரணமாக பரமசிவேந்த்ரர் **ஸ்வாத்மானுஸந்தானம்** அல்லது **வேதாந்த நாம ரத்ன ஸஹஸ்ரம்** என்ற நூலை இயற்றி இருக்கிறார். இதற்கு தஞ்சை ஸரஸ்வதி மஹாலிலும் (நம்பர் 7592) சென்னை அரசாங்க ஏட்டு ப்ரதி நிலையத்திலும் (நம்பர் 15508) உள்ள சுவடிகளில் பரமசிவேந்த்ர ஸரஸ்வதி என்றே இறுதி புஷ்பிகைகளில் குறிக்கப்பட்டிருக்கிறது. நிற்க, பரமசிவேந்த்ரர் தன் குருவை அபிநவநாராயணேந்த்ர ஸரஸ்வதி என்று குறித்திருப்பதை ஏற்றுக்கொள்ளுகிறார் கள்; குரு 'இந்த்ர ஸரஸ்வதி'யாய் இருந்தால், சிஷ்யர் எவ்வாறு அப்படி இல்லாமலிருக்கமுடியும்? மேலும், ஆச்ரமி களின் பத்துவகை பிருதங்களில் 'இந்த்ர' என்பது ஒன் றல்ல; 'இந்த்ர ஸரஸ்வதி' என்ற முழுந் தொடரே ஆச்ரமபிருதமாகும். 'ஸரஸ்வதி' என்று சொல்லப்படாம

1. See Journal of Oriental Research, Madras, Vol. XIV. Pp. 24-5.

லிருப்பதை ஒரு குறையாகக் கூறுவது அத்வைத நூல்களைப் படித்து வருபவரால் சொல்லமுடியாது ; ஏனெனில் ஆச்ரமிகள் இயற்றிய பல நூல்களில் ஆச்ரமியாயிருந்து எழுதியவரையும் அவர் குருக்களையும் ஆச்ரமவாசகபதமில்லாமல் சொல்லும் இடங்களே மிகையாயிருக்கின்றன. சிவகீதிமாலிகை எழுதியவர் நூலிறுதியில் காமகோடி பீடாதிபதியென நன்ருய் எழுதிவைத்திருக்கிறது ; [1] ஆனல் பாட்டுக்களின் முத்ரையில் தன்னை அவர் சந்த்ரசேகரர் என்ருே சந்த்ரசேகரயதியென்ருேதான் குறித்திருக்கிருர். ஸ்ரீ பரமசிவேந்த்ரரை 'ஆர்ய' என்று சொல்லியிருப்பதால் இவர் பரமசிவேந்த்ர அய்யர், ஸதாசிவப்ரம்மத்தின் குரு ஒரு க்ருஹஸ்தர் என்று சொல்லலாமா !

நிற்க, பரமசிவேந்த்ரர்களை ஒருவர் '**ஜகத்குரு**' என்று தம் நூலில் குறிப்பிட்டிருந்தால் அது இவர் பீடாதிபதியாயிருந்தாரென்பதற்கு மறுக்கமுடியாத அத்தாக்ஷி ஆகுமல்லவா? அப்படிப்பட்ட சான்று ஒன்றை இங்கே காட்டலாம். அக்காலத்தில் இருந்த புகழ்பெற்ற கவிகளுள் முக்யமான ஒருவர் **வேங்கடக்ருஷ்ண தீக்ஷிதர்** என்பவர். இவர் முதலில் சிதம்பரத்தில் இருந்து அங்கே **நடேச விஜயம்** என்ற காவ்யத்தை எழுதிவிட்டு, ஸஹஜியின் ஆதரவின்கீழ் **ஸஹஜிராஜபுரம்** என்ற **திருவிசநல்லூரில்** தங்கினர் ; அவர் எழுதிய மற்ற இலக்கியங்கள் **ராமசந்த்ரோதய காவ்யம், உத்தரசம்பூ, குசலவவிஜய நாடகம்** என்பன. இவற்றுள் இறுதியில் சொல்லப்பட்ட குசலவ விஜய நாடகத்தின் ப்ரஸ்தாவனையில் தீக்ஷிதர் தன்னை '**த்ரிலோகீகுரு**'

---

1. श्रीकाञ्चीकामकोटिपीठाधिप श्रीचन्द्रशेखरेन्द्रसरस्वतीयतिवरा- विरचितायां शिवगीतिमालिकायां दशमः सर्गः ।

வான பரமசிவேந்த்ரரால் ப்ரம்ம வித்யை கற்பிக்கப்பட்டவ ராக வர்ணித்துக்கொண்டிருக்கிறூர்.

स किल पलकुचेरिग्रामवास्तव्यविद्व-
ज्जनमुकुट वतंसाद् वासुदेवाध्वरीन्द्रात् ।
अधिगतपदवाक्यन्यायतन्त्रः, **त्रिलोकी-
गुरुपरमशिवेन्द्रा**ध्यापितब्रह्मविद्यः ॥

(இந்தியன் ஆண்டிக்வாரி, 1904, பக்கம் 181)[1]

வ்ருத்தத்தையொட்டி 'த்ரிலோகி குரு' என்று வைத்திருக் கும் சொல் 'ஜகத்குரு' என்பதின் பர்யாயமாகும். பீடாதி பதி யன்றி மற்றவர் இந்தப் பட்டத்திற்கு உரியவரல்ல.

இதே காலத்தில் மற்ருெரு பரமசிவேந்த்ர ஸரஸ்வதி பீடாதிபதியாயிருந்திருக்கலாம், ஸதாசிவ ப்ரம்மேந்தரரின் குரு பரமசிவேந்த்ரர் வேறு என்று இதற்குமேல் கக்ஷி சொல்லலாம். இதே காலத்தில் ப்ரஸித்தமாய் மற்ருெரு பரமசிவேந்த்ரர் இருந்தார் என்று சொல்வது வீண் கல்பனை யாகும். திருவிசநல்லூர் வேங்கடக்ருஷ்ண தீக்ஷிதருக்கு ப்ரம்மவித்யா குருவாயிருந்த ஜகத்குரு பரமசிவேந்த்ர ஸரஸ்வதிதான் ஸதாசிவேந்த்ரர்களுக்கும் குருவாயிருந்தவர்.

காமகோடி பீடாதிபதிகளின் பரம்பரையில் 57-வது ஆசார்யர்களாயிருந்த பரமசிவேந்த்ரர் மடத்தின் கணக்கின் படி கொஞ்சம் முன் இருந்ததாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. இதைக் கொண்டு ஸதாசிவ ப்ரம்மேந்த்ரர்களின் குருவிற்கும் பீடத்திற்கும் ஸம்பந்தமில்லையென்று வாதிக்கப்படுகிறது. இந்திய சரித்ர ஆராச்சியாளருக்கு இத்தகைய கணக்கு

---

1. தஞ்சை ஸரஸ்வதீ மஹால் வெளியீடு ஸ்ரீதரவேங் கடேச அய்யாவாளின் சாஹேந்த்ர விலாஸம், முகவுரை பக்கம் 47 பார்க்கவும்.

வித்யாஸம் பழகிய விஷயமே. ஸுப்ரஸித்தமான **ராஜ தரங்கிணியின்** அரசரின் தேதிகளில்கூட இப்படிப்பட்ட ஏற்றத் தாழ்வுகள் கணக்கில் காணப்படுகின்றன. ப்ரபவாதி சக்ரம் ஒன்றைத் தவறி எண்ணிவிட்டால் ஒரு அறுபது வருஷங்கள் முன்பின் தள்ளிப் போகிறது ; இந்திய சரித்ரத் தேதிகளை ஆராய்பவர்களுக்கு இது அனுபவமான விஷயமே. ஆகையால் நேற்றுவரையில் ஸதாசிவப்ரம்மேந்த்ரர்களுக்கும் காமகோடி பீடத்திற்கும் இருந்த தொடர்பை நம்பி எழுதிவந்த பெரியார்கள் இன்று ஏதோ காரணம்பற்றி தம்மை திருத்திக் கொண்டுவிட்டதாகக் கருதுவது தேவையில்லை என்று தெளிவாகிறது.

பரமசிவேந்த்ரர்களின் நூல்களில் அவர் தம் குருவை அபிநவ நாராயணேந்த்ர ஸரஸ்வதி என்று குறிப்பிட்டிருக்கிறார் ; இது ஒரு முரண்பாடாகும் என்றும் காட்டப்படுகிறது. அத்வைத நூல்களைப் படித்தவர்களுக்கு ஒரே ஆசிரியருக்குப் பல குருக்கள் உண்டு என்பது அடிப்படையாகத் தெரிந்திருக்கும் விஷயமாயிருக்க, இந்த குரு-த்வைதத்தை இடஞ்சலாய் மிகைப்படுத்துவது பொருந்தாது.

பரமசிவேந்த்ர ஸரஸ்வதி இயற்றிய நூல்களில் **தஹரவித்யாப்ரகாசிகை** அச்சாகியிருக்கிறது. **சிவகீதா தாத்பர்ய ப்ரகாசிகை** ஒரு பகுதி அச்சாகி யிருக்கிறது. வெளியேயாகாததும் இவர் இயற்றிய நூல்களில் முக்யமானதுமாகும் **வேதாந்த நாம ரத்ன ஸஹஸ்ரவ்யாக்யா** என்ற **ஸ்வரூபானுஸந்தானம்.** இதில் உபநிஷத்துகளில் ப்ரம்மவாசகமாயிருக்கும் சொற்களை அகாராதிக்ரமமாய் தொகுத்து வ்யாக்யானம் செய்திருக்கிறார்கள். இதில் ச்ருதி, இதிஹாஸ புராணங்கள், அத்வைத க்ரந்தங்கள்

இவற்றிலிருந்து ஏராளமான மேற்கோள்கள் தரப்பட்டிருக்கின்றன.

பரமசிவேந்த்ர ஸரஸ்வதியின் பல சிஷ்யருள் மிகவும் ப்ரஸித்தராயும் போற்றப்பட்டவராயும் இருப்பவர் **ஸதாசிவ ப்ரம்மம்.** இவர் ஜீவன் முக்தராயிருந்து மன்னர்களையும், மக்களையும் அனுக்ரஹித்து நடத்திய லீலைகளைத் தமிழ்நாட்டில் தெரியாத அறிவாளிகளில்லை. இவர் சரித்ரத்தை பலர், பலவிடங்களில் விரிவாய் எழுதியிருக்கின்றனர்.[1]

இவர் இயற்றிய நூல்கள்: **ப்ரம்ஹஸூத்ர வ்ருத்தி ப்ரம்ஹதத்வப்ரகாசிகை; யோகஸூத்ரவ்ருத்தி யோக ஸுதாகரம்**; உபநிஷத்துக்களில் **கைவல்ய, அம்ருதபிந்து**க்களுக்கு **வ்யாக்யானங்கள்**; அப்பய்ய தீக்ஷிதரின் ஸித்தாந்த லேச ஸங்க்ரஹத்திற்கு **ஸித்தாந்தகல்பவல்லி**யென்ற சுருக்கமும், அதன் உரையான **கேஸராவளியும்**; தன் குரு பரம சிவேந்த்ரரை வணங்கும் **நவமணிமாலை**; தன் குரு எழுதிய வேதாந்த நாம ரத்ன ஸஹஸ்ரத்திலிருந்து எடுத்துத் தொகுத்த நாமாவளி ரூபமான **ஆத்மானுஸந்தானம்**; இரண்டு **ஆத்ம வித்யாவிலாஸங்கள்**; **கீர்த்தனங்கள்**. **சிவமானஸிகபூஜை** என்பதும் இவருடைய நூலாகச் சுவடிகளில் காணப்பட்டு அச்சும் ஆகியிருக்கிறது. இவற்றைத் தவிர **ஸூதஸம்ஹிதாஸார**மென்றதின் ஒரு பகுதி இவருடைய நூலாக வெளியாகியிருக்கிறது. ப்ரம்மேந்த்ரர் ஸூதஸம்ஹிதாஸாரம் எழுதியதோடு **பாகவதஸாரம், பரமஹம்ஸசர்யை** என்று பெயர் கொண்ட நூலையும் செய்

---

1. உதாரணமாக வாணீவிலாஸப் பதிப்பு யோக ஸுதாகரம் முகவுரை; வேதாந்த கேஸரி சென்னை, டிஸம்பர் 1950.

திருப்பது சுவடிகளிலிருந்து தெரிகிறது. இவை எல்லாம் ஒரு பெரிய நூலின் பாகங்களாகும்; எல்லா புராணங்களி லும் காணப்படும் அத்வைத தத்வங்களையும், பரம ஹம்ஸசர்யைகளையும் ப்ரம்மேந்த்ரர் பெரும் நூலொன்றில் தொகுத்தார் என்று தோன்றுகிறது.[1]

ஒன்றிற்கு மேலான பெயர்கள் ஸந்நியாஸிகளுக்கு ஏற்படுவது இயல்பே; தீக்ஷை, பீடாரோஹணம் முதலியவற் ருல் பெயர்கள் மாறும். ஆங்கில ஸமூகத்தில் ஒரே மனிதன் ஸாமான்யனுயிருக்கும்போது பெயர் ஒன்று, அவனுக்கு ப்ரபு பதவி வந்து 'மார்க்விஸ்', 'லார்ட்' என்ற கௌரவம் ஏற்பட்டதும் பெயர் மற்ருென்று ஏற்படுவதுபோல் பீடாரோஹணத்திற்கு முன்னும் பின்னும் பெயர்கள் வித்யாஸப்படும். இவ்வாறே **ஆத்மபோதத்திற்கு** உரை எழுதிய **போதேந்த்ரர்** தம் நூலில் **'அத்வைத பீட ஸ்தித தேசிக'**[2] என்று சொல்லியிருக்கும் **கீர்வாணேந்த்ர** குருவை யும், அய்யாவாள் தம் **ஸ்துதி பத்ததியில்** நாம ஸித்தாந்தம் செய்தவராயும் **'ஜகத்குருவாயும்'** இருந்ததாய்ச் சொல்லி நமஸ்கரிக்கும் **கோவிந்தஸம்யமியையும்**[3] நாம் அறிந்து கொள்ளவேண்டும்.

---

1. சாஹேந்த்ர விலாஸம் முகவுரை 34-வது பக்கம்.

2. अद्वैतपीठस्थितदेशिकं तं गीर्वाणयोगीन्द्रगुरुं ह्रदन्तः ।

3. ईशेन यं प्रति सकृन्निजनामधेय-
संकीर्तनस्य सकलाघनिवर्तकत्वम् ।
साक्षादभण्यत जगद्गुरुमाश्रयेऽहं तं
गोविन्दसंयमिवरं मम भागधेयम् ॥

இப்படியே திருவாரூர் கோயிலில் த்யாகேசன் ஸந்நிதியில் முறைப்படி பாடப்பட்டுவந்த **சிவகீதிமாலிகா** என்ற அஷ்டபதியை இயற்றிய **ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி**யும் காஞ்சி காமகோடி பீடாதிபதியாயிருந்தவரே.

ஸுப்பராமதீக்ஷிதர், மைசூர் ஸதாசிவராயர் முதலிய ப்ரபல வாக்கேயகாரர்களும் காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான சங்கராசார்யர்களை தம் ஸாஹித்யங்களில் பாடியிருக்கின்றனர்.

காமகோடி பீடாதிபதிகளான சங்கராசார்யர்களை அதிகாரத்திற்கு வந்த ப்ரிடிஷ் அரசாங்கமும், ஸமூஹப்ரதிநிதியாகவும், மதாசார விஷயங்களில் தீர்ப்பு சொல்ல வேண்டிய உரிமையுள்ளவராகவும் ஒப்புக்கொண்டுவந்த நடவடிக்கைகள் தஞ்ஜை ஜில்லா தஸதவேஜுகளைப்[1] பார்த்தால் தெரியவரும். தஞ்ஜை ரெஸிடெண்டிற்கு கும்பகோணத்திலிருந்து சங்கராசார்யார் தஞ்சைக்கு வரும்போது உயர்ந்த முறையில் வரவேற்பு நடத்த வேண்டுமென்று கலெக்டர் உத்திரவு விடுவித்தான் (26-10-1808). 19—4—1792 இல் ரெவின்யூ போர்ட் உத்தரவு ஒன்று சங்கராசார்யாருக்கு கொடுக்கவேண்டியதாயுள்ள பணங்களைக் கொடுக்கும்படி சொல்லுகிறது. கோர்ட் கச்சேரி ஏற்பாடு செய்யும் போது அங்கே எந்த படங்களை வைப்பதெனச் சர்ச்சை ஏற்பட, இதை சங்கராசார்யாரைக் கேட்டுத் தீர்மானிக்கவேண்டுமென மூன்று உத்திரவுகள் விடுக்கப்பட்டன. தஞ்ஜை ஜில்லாவில் மட்டுமல்ல; சென்னையில் ப்ராம்மணஸமூஹத்திற் கிடையே அபிப்ராய

---

1. Guide to the Records of the Tanjore Dist., 1749-1835, 8 Vols. 1935-6 ff.

பேதம் ஏற்பட்டு, அவர்கள் தஞ்ஜை ராஜாவிற்கு மனு கொடுக்க, இது சங்கராசார்யார் தம் பண்டிதருடன் கலந்து தீர்க்கவேண்டியது என ரெஸிடெண்ட் உத்திரவு போட்டான் (22—11—1807)

இப்படி ஸமீபகாலத்திலிருந்து முன் ஆதிசங்கரர்காலம் வரை மக்களிடையேயும் பண்டிதர்களிடையேயும் ஸுப்ரதிஷ்டிதமாய் விளங்கிவந்திருக்கிறது காஞ்சி காமகோடி பீடம். ஆதிசங்கரர் முக்யமாய் செய்த பணி அவைதிகமான பௌத்த ஜைன மதங்களை வென்றது. அக்காலத்தில் இந்த அவைதிகமதங்கள் காஞ்சியில் ப்ரபலமான மடங்களையும், விஹாரங்களையும் கொண்டிருந்தன; அவற்றின் சிதைவுகள் இன்றும் காமாக்ஷி கோயிலின் அருகாமையில் காணப்படுகின்றன. ஒரு மதத்தையும் மடத்தையும் முறியடித்தால், அவற்றைப் பிடித்துக் கொள்வது என்பது தொன்றுதொட்டு வரும் மரபு; அரசியலில் எப்படியோ அப்படியே மதவியலிலும்; வாதத்தில் ஜயிப்பதுடன் நில்லாமல் தம் மதத்தையும் நன்கு நிலைக்கும்படி செய்வதானால் அதற்கு வேண்டிய ஸ்தாபனம் ஒன்றை தலைவர் ஒருவர் அவ்விடத்தில் ஏற்பாடு செய்யவில்லை என்று சொல்வதை எவரும் ஏற்க மாட்டார்கள். காஞ்சியில் ஆதிசங்கரர் மடம் வைக்கவில்லை என்றால் வேறு இடங்களில் அவர் வைத்திருக்க வேண்டியதே இல்லையென சரித்திரம் தெரிந்தவர் தைர்யமாய்ச் சொல்லலாம். நாகார்ஜுனகொண்ட என்ற பௌத்த க்ஷேத்ரத்தில் பௌத்தரைவென்று, அவருக்கு அப்புறம் அதிகாரம்பெற்ற சங்கரமதத்திற்கு அங்கே ஒரு மட ஸ்தாபனம் இருந்தது அங்கு அகப்பட்டுள்ள புதைப்பொருள்களினின்றும், அந்த இடத்திற்கு ஸமீபகாலம் வரை உரிமையுள்ளவராயிருந்தவர்களினின்றும் தெரிகிறது.

கல்வெட்டுகளையே சான்ருக வைத்துப் பார்த்தால் கல்லில் தான் முட்டிக்கொள்ளவேண்டும். தொன்று தொட்டு வரும் மஹாஜன நம்பிக்கையை உதயனர் ஈச்வர ஸித்தியில் எப்படி ப்ரமாணமாகச் சொல்லியிருக்கிருரோ அதுபோல, ஸம்ப்ரதாயமாய் ஆஸ்திகருக்கு இருந்துவரும் நம்பிக்கையை புறக்கணிக்க முடியாது. ஆதிசங்கரர் இருந்தார் என்பதற்கு கல்வெட்டா இருக்கிறது ? கல்வெட்டை விட ஆழமாக நம் ஹ்ருதயத்தில், அவர் இருந்ததும், செய்த வேலையும் வெட்டப்பட்டிருக்கின்றன. விக்ரமாதித்யன் இருந்தானு, அவன் எந்த ராஜவம்சம், எந்த நூற்ருண்டு என்று சரித்ர ஆராய்ச்சியாளர் முடிவின்றி விவாதித்துக் கொண்டிருக்கின்றனர். ஆனல் விக்ரமாதித்யன் இந்திய மக்கள் மனதில் ஆழ்ந்து கிடப்பதைத் தள்ளி விட முடியாது. இப்படிப்பட்ட விஷயத்தில் சான்றுகளைத் தேடுவதை காளிதாஸன் சாகுந்தலத்தில் துஷ்யந்தன் வாயிலாகச் சொல்லியிருப்பதோடு ஒப்பிடலாம்: 'கண்ணிற்கு எதிரே யானை—சின்ன வஸ்துவல்ல—போயிற்ரும்; அதை கவனிக்க வில்லையாம்; போன பிறகு யாரோ சொன்னதும், "எங்கே, கீழே யானையின் அடிகள் இருக்கின்றனவா, அவற்றைக் கொண்டு அனுமானம் செய்வோம்" என்ருனும் ஒருவன்'!

यथा गजो नेति समक्षरूपे तस्मिन्नतिक्रामति संशयः स्यात् ।
पदानि दृष्ट्वा तु भवेत्प्रतीतिः तथाविधो मे मनसो विकारः ॥

ஈச்வரர் (God) உண்டென்பதற்கு ஈச்வரஸ்பர்சமும் ஈச்வரானுபவமும் ஏற்பட்ட மனிதர் (Godly men) இருப்பது ஒரு சான்று என்று ஈச்வரவாதிகள் (Theists)

சொல்லும் யுக்தி ஒன்று உண்டு. அதே மாதிரி தற்போது நம்மிடையே சங்கரரின் அபராவதாரமாகத் தோன்றி, ஜீவன்முக்த நிலையையும், லோகஸங்க்ரஹ லீலையையும் நிரூபித்துக் கொண்டிருக்கும் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ரஸரஸ்வதி சங்கராசார்யரே நமக்கு சிறிய சான்றாகி, நம்மையெல்லாம் காளிதாஸன் குறிப்பிட்ட மனோவிகாரங்களிலிருந்து காத்து, புறக்கணிக்கத் தோன்றிய நம்பிக்கையை மீண்டும் ஏற்று, கடைத்தேறுமாறு அருள்வாராக.

लोकानुग्रहलीलां जीवन्मुक्तस्थितिं चैव ।
श्रीमत्सदाशिवेन्द्रप्रतिमो यो निरूपयन् चरति ॥
काञ्च्यां पूर्वं स्वेन स्थापितमाचार्यपीठमास्थाय ।
धर्मोद्धाराय पुनर्जातो यः शङ्करः साक्षात् ॥
तं चन्द्रशेखरेन्द्रं करुणार्द्रदृशं जगद्गुरुं नौमि ।
स च संयुनक्तु बुद्ध्या शुभया नः सत्यदृष्टये नित्यम् ॥

டாக்டர் வே. ராகவன்

|| श्रीः ||

श्रीगुरुभ्यो नमः

# ஸ்ரீ ஸதாசிவ ப்ரும்மேந்த்ர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் விஜயம்

ஜகத்ப்ரஸித்தாளான அவதூத மார்கப்ரதர்சக ஸ்ரீ ஸதாசிவ ப்ரும்மேந்த்ராளின் குரு ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடத்தில் 57-வது பீடாதிபதியாயிருந்த ஸ்ரீ பரமசிவேந்த்ராள். இவாளைப் பற்றி ஸ்ரீ ஸதாசிவ ப்ரும்மேந்த்ராளே தான் இயற்றிய ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் பரம்பரையைப் பற்றிய குருரத்ன மாலிகையில் கூறியிருக்கிருர்கள்.

हृदये स पदं सदा विधत्तां सदयो मे प्रणुदन् प्रमादवत्ताम् ।
निगमान्तगुरुः परशिवात्मा सुगमस्साधुततेर्यमी महात्मा ॥ (85)

यदुदीक्षणलेशतो जनानां विदुरद्वैतमतिं द्वितां धुनानाम् ।
तमहं परमाश्चितं शिवेन्द्रं शमवन्तं शरणं श्रये यमीन्द्रम् ॥ (86)

"ஸஜ்ஜனங்களுக்கு ஸுலபமாக ஆச்ரயிக்கக் கூடியவரும் மஹாத்மாவாயும் தயையுள்ளவரும் யமநியமாதி யோக நிஷ்டையுடன் கூடியவரும் ஆன எனது வேதாந்த குரு பரமசிவேந்த்ரர் எனது

ப்ரமாதம் முதலிய சித்த தோஷங்களை விலக்கிக் கொண்டு என்னுடைய ஹ்ருதயத்தில் எப்பொழுதும் வஸிக்கட்டும். ஜனங்களுக்கு எவருடைய கடாக்ஷ வீக்ஷணத்தால் த்வைத புத்தியை விலக்கும் அத்வைதஜ்ஞானம் ஸுலபமாக உண்டாகுமென்று பெரியோர்கள் கூறுகின்றனரோ சமம் நிறைந்த அந்த பரமசிவேந்த்ரர் என்ற யதிச்ரேஷ்டரை சரணமடைகிறேன்" என்று. இவ்விடத்தில் ஸுஷமா என்ற ஆத்மபோதேந்த்ர ஸரஸ்வதீ இயற்றிய குருரத்ன மாலிகா வ்யாக்யானத்தில் '**अथ सप्तपञ्चाशमात्मनो देशिकमभिष्टवीति द्वाभ्यां-हृदय इति**' 'தனது குருவான 57-வது காமகோடி பீட ஆசார்யாளை இரண்டு ச்லோகங்களால் ஸ்தோத்ரம் செய்கிறார் ஸதாசிவ ப்ரும்மேந்த்ரர்' என்று அவதாரிகை வைக்கப்பட்டிருக்கிறது. இதனுல் ஸதாசிவப்ரும்மேந்த்ரரின் குருவான பரமசிவேந்த்ரர் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தில் 57-ஆவது பீடாதிபதி என்று ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. ஸதாசிவப்ரும்மேந்தராள் பகவத்பாதாள் முதலாகத் தனது குருவான பரமசிவேந்த்ராள் வரையிலுள்ள 57 காமகோடி பீடாதிபதிகளை ப்ரசம்ஸிப்பதாகிய குருரத்ன மாலிகை என்ற 86 ச்லோகங்கள் கொண்ட வஸந்தமாலா வ்ருத்தத்தினுல் அமைக்கப்பட்ட ஓர் க்ரந்தத்தை ஆத்மபோதர் என்ற பெயருடையவரும், பரமசிவேந்த்ரரின் சிஷ்யரும், தனக்கு ஸஹபாடியும் 58-ஆவது காமகோடி பீடாதிபதியுமான யதிச்ரேஷ்டரின் ப்ரார்த்தனையினுல் தான் செய்ததாக குருரத்னமாலை

யின் கடைசி ச்லோகத்தில் கூறுகிருர். அந்த ச்லோகம் வருமாறு:—

इति नाथनयाऽऽत्मबोधनाम्नो यतिराजस्य सदाशिवेन्द्रभूम्ना ।

कलिता जयताद्वसन्तमालाषडशीत्या गुरुराजरत्नमाला ॥ (87)

என்று.

இங்கு ஸுஷமா வ்யாக்யானத்தில் '**आत्मबोधनाम्नः- तदाख्यस्य यतिराजस्य - आत्मबोधेन्द्रसरस्वत्याः । परमशिवेन्द्रसमनन्तराचार्यमणेरिति यावत् । सदाशिवेन्द्रभूम्ना - सदाशिवब्रह्मेन्द्रेणेति यावत्। अयं किल आत्मबोधेन्द्रः श्रीपरमशिवेन्द्रार्यान्तेवासी सदाशिवब्रह्मेन्द्रसब्रह्मचारीति च सुविशदमद्यापि श्रूयते ।**' என்ற வாக்யங்களால் ஆத்மபோதர் என்ற ஆத்மபோதேந்த்ர ஸரஸ்வதீ என்பவர் பரமசிவேந்த்ரரின் சிஷ்யர். அவருக்கு அடுத்த காமகோடி பீடாதிபதி, ஸதாசிவப்ரம்மத்தின் ஸஹபாடி, என்று ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருக்கிறது.

ஸுஷமா என்னும் குருரத்னமாலா வ்யாக்யானம் எழுதியவர் யார் என்று வாசகர்களுக்குத் தெரிவிக்கிறோம். மேல் கூறப்பட்ட ஸதாசிவ ப்ரம்மத்தின் ஸஹபாடியும் பரமசிவேந்த்ரரின் சிஷ்யரும் 58-ஆவது காமகோடி பீடாதிபதியுமான ஆத்மபோதேந்த்ர ஸரஸ்வதி என்பவர் விச்வாதிகேந்த்ர ஸரஸ்வதி என்றும் ப்ரஸித்தி அடைந்தவர். அவருடைய சிஷ்யர் பகவந்நாம போதேந்த்ரர் என்று ப்ரஸித்தரான ஆசார்யர். 59-ஆவது பீடாதிபதியாவார். அவரது சிஷ்யர் ஆத்மப்ரகாசேந்த்ர ஸரஸ்வதீ என்பவர். 60-ஆவது பீடாதிபதியாவார்

2

அவருக்கு ஸ்ரீ கோவிந்த ஸம்யமீ என்றும் ப்ரஸித்தி யுண்டு. அந்த 60-ஆவது பீடாதிபதியான ஆத்ம ப்ரகாசேந்த்ர ஸரஸ்வதியின் சிஷ்யர்தான் ஸுஷமா என்னும் வ்யாக்யானம் எழுதிய ஆத்மபோதர். இதை ஸுஷமாகாரர் தனது ஸுஷமாவின் ஆரம்பத் திலேயே கூறியிருக்கிறார்:—

'आत्मप्रकाशेन्द्रसरस्वतीनामाराधकेनाङ्घ्रियुगस्य नित्यम् ।
व्याख्याऽऽत्मबोधेन गुरुस्तवस्य वितन्यते विश्वविवेकहेतोः ॥

என்று.

ஸுஷமாகாரர் பரமசிவேந்த்ராளைத் தனக்கு **'परमेष्ठिगुरुः'** என்று க்ரந்தாரம்பத்தில் கூறுகிறார். உலகில் ஸன்யாஸிகள் (1) தமது குரு (2) அவருடைய குரு (3) அவருடைய குரு (4) அவருடைய குரு ஆக நான்கு பெரியோர்களையும் (1) **गुरु** (2) **परमगुरु** (3) **परापर गुरु** (4) **परमेष्ठिगुरु** என்று வரிசையாகக் கூறுகிற வழக்கம். ஆதலால், ஸுஷமாகாரருக்கு பரமசிவேந்த்ரர் 4-ஆவது பரமேஷ்டிகுரு. அவருக்கு அடுத்த ஆத்மபோதேந்த்ர ஸரஸ்வதீ என்ற விச்வாதிகேந்த்ர ஸரஸ்வதீ 3-ஆவது பராபர குரு. அவருக்கு அடுத்த போதேந்த்ரர் 2-ஆவது பரமகுரு. அவருக்கு அடுத்த ஆத்மப்ரகாசேந்த்ரர் என்ற கோவிந்த ஸம்யமீ 1-ஆவது குரு என்று ஸ்பஷ்டமாகிறது.

காஞ்சீ காமகோடி பீடத்தில் 56-ஆவது பீடாதிபதியாக இருந்தவர் ஸர்வஜ்ஞஸதாசிவ போதேந்த்ரர் என்பவர். இவர்தான் 57-ஆவது பீடாதிபதியான

பரமசிவேந்த்ர ஸரஸ்வதியின் குரு. இவர் பகவத் பாதாள் முதல் தனது குருவான சந்த்ரசூடேந்த்ர ஸரஸ்வதி என்ற 55-ஆவது பீடாதிபதியான ஆசார் யாள் வரையில் ஒவ்வொரு ஆசார்யாளுடையவும் ஊர், பெயர், ஸித்தி அடைந்த இடம், காலம் முதலியவற்றைக் கூறுகிற '**पुण्यश्लोकमञ्जरी**' புண்ய ச்லோக மஞ்ஜரி என்ற க்ரந்தம் இயற்றியவர். இந்த க்ரந்தத்திற்கு '**पुण्यश्लोकमञ्जरीमकरन्दः**' புண்ய ச்லோக மஞ்ஜரீமகரந்தம் என்ற வ்யாக்யானம் ஸுஷமாகாரர் எழுதியிருக்கிறார். அத்துடன் '**पुण्यश्लोकमञ्जरीपरिशिष्टम्**' புண்யச்லோக மஞ்ஜரீ பரிசிஷ்டம் என்ற க்ரந்தமும் இயற்றியிருக்கிறார் அதே ஸுஷமாகாரர். அதில் 56, 57, 58, 59, 60-ஆவது ஆசார்யாளான 5 பீடாதிபதிகளுடைய புண்ய ச்லோகங்களை இயற்றியிருக்கிறார்.

அந்த ஸுஷமாகாரர் புண்யச்லோக மஞ்ஜரீ மகரந்தமென்கிற புண்ய ச்லோகமஞ்ஜரீ வ்யாக் யான க்ரந்தத்தில்,

गोविन्दात्मप्रकाशाश्रमिपदकमलच्छायमासेव्य दीव्य-
त्तत्वालोकावधूतप्रसृमरतिमिरः स्पष्टदृष्टाखिलार्थः ।
भक्तिस्फारादरश्रीधरकविकवितानन्दनिष्पन्दवृत्तिः
व्याख्यामाख्यत्त्वमिख्यां विमृशत मकरन्दाभिधामात्मबोधः ॥'

என்று கூறியிருக்கிறார். இந்த ச்லோகத்தில் ஸுஷமாகாரர் தனது குரு கோவிந்தர் என்று ப்ரஸித்திபெற்ற ஆத்மப்ரகாசர் என்றும் ஸ்ரீதரர்

என்று ப்ரஸித்தரான அய்யாவாளுடைய பக்தி க்ரந்தங்களில் தான் ரொம்பவும் ஈடுபட்டவரென்றும் கூறுகிருர். ஸுஷமாகாரரின் குருவாயும் ஆத்ம ப்ரகாசேந்த்ர ஸரஸ்வதீ என்று பெயருள்ளவரும் 60-ஆவது பீடாதிபதியுமான கோவிந்த ஸம்யமியை ஸ்ரீதரவேங்கடேசர் என்ற அய்யாவாள் தனது ஸ்துதிபத்ததி என்ற க்ரந்தத்தில்,

ईशेन यं प्रति सकृन्निजनामधेयसंकीर्तनस्य सकलाघनिवर्तकत्वम् ।
साक्षादभण्यत जगद्गुरुमाश्रये तं गोविन्दसंयमिवरं मम भागधेयम् ॥

என்ற ச்லோகத்தில் 'பரமேச்வரனே ஸாக்ஷாத்தாக எந்த கோவிந்த ஸம்யமியின் முன்பு ஆவிர்பவித்துத் தனது நாமாவை ஸக்ருதாவ்ருத்தியாவது ஸங்கீர்த்தனம் செய்தால் ஸகலபாபங்களும் விலகும் என்று கூறினுரோ, அவ்விதம் பரமேச்வரனுல் நேரில் தோன்றி அனுக்ரஹிக்கப்பெற்றவரும் ஜகத்குருவும் எனது பாக்யமே உருக்கொண்டமாதிரியுள்ளவருமான கோவிந்த ஸம்யமியை நான் ஆச்ரயிக்கிறேன்,' என்று கூறியிருக்கிருர். இதனுல் கோவிந்தஸம்யமீ அய்யாவாள் காலத்தில் இருந்தவர் என்று தெரிகிறது.

கோவிந்த ஸம்யமியின் குருவான பகவன்னும போதேந்த்ரர் கணக்கற்ற க்ரந்தங்கள் எழுதியவர். அவர் 'நாமாம்ருத ரஸாயனம்' என்ற க்ரந்தத்தில் '**अस्याः श्रुतेरर्थः श्रीधरवेङ्कटेश्वरशास्त्रिभिः भगवन्नामभूषणे विस्तरेणोक्तः**' என்ற வாக்யத்தில் ஸ்ரீதர வேங்கடேசர் என்ற அய்யாவாள் செய்த பகவந்நாம பூஷணம்

என்ற க்ரந்தத்தை அனுவதிக்கிருர். இதனுல் அய்யாவாள், பகவந்நாமபோதேந்த்ரர், அவரது சிஷ்யரான ஆத்மப்ரகாசேந்த்ரர் என்ற கோவிந்த ஸம்யமீ இம் மூவர்களும் ஒரே காலத்தில் இருந்தவர் களென்றும், அய்யாவாள் போதேந்த்ரரின் க்ரந்தங் களுக்கு முந்தியே க்ரந்தம் எழுதியவர், போதேந்த்ரரு டைய பஹுமான பாத்ரர் என்றும், கோவிந்த ஸம்யமீ பால்யாவஸ்தையிலுள்ளவர் அய்யாவா ளுக்கு விசேஷ அபிமான பாத்ரர் என்றும் தெரி கிறது.

கோவிந்தஸம்யமியின் சிஷ்யரான ஆத்மபோதர் என்ற ஸுஷமாகாரர் கோவிந்த ஸம்யமியின் மற்ருெரு சிஷ்யரும் 61-ஆவது காமகோடி பீடாதி பதியுமான குசஸ்தலீ மஹாதேவேந்த்ரரின் ஸஹ பாடியும் அவரது காலத்தில் அவரோடுகூட வஸித்த வரும் அவரிடத்தில் பக்தியுள்ளவருமாவார். அதனுல் தான் ஸுஷமா க்ரந்தத்தின் முடிவில் ஸுஷமாகாரர் இந்த மஹாதேவேந்த்ரரை ஸ்துதிக்கிருர். அவர் காலத்தில்தான் ஸுஷமா எழுதியதாகத் தெரிகிறது.

अजस्रं श्रीविद्याचरणजलजातद्वयमिल-

न्मिलिन्दात्मा योगेश्वरसततनिध्याननिरतः ।

महादेवः श्रीमान् भुवनगुरुरद्वैतपदवीं

वितन्वन्नुद्वेलं जयति शिवकाञ्चीगुरुमठे ॥

महादेवपदांभोजमरालायितचेतसा ।

आत्मबोधेन जयतादाहिता सुषमा चिरम् ॥

जयतु जयतु काञ्चीकामकोट्याख्यपीठी
जयतु जयतु लिङ्गं चन्द्रमौलीशसंज्ञम् ।
जयतु जयतु कामं शारदाश्रीमठोऽयं
जयतु जयतु भूमा श्रीमहादेवनामा ॥

என்று. இந்த ச்லோகங்களில், சிவ காஞ்சியில் உள்ள ஜகத்குருவின் சாரதா ஸ்ரீ மடத்தில் காமகோடி பீடத்தில் யோகேச்வர லிங்கத்தைப் பூஜித்துக்கொண்டும் ஸ்ரீவித்யாராதனம் செய்து கொண்டும் அத்வைத மார்க்கத்தை விளக்கிக் கொண்டும் மஹாதேவேந்த்ரஸரஸ்வதீ என்ற குரு விளங்குகிறார். அவரது சரணத்தில் பக்தியுள்ள ஆத்மபோதராகிய நான் ஸுஷமா என்கிற க்ரந்தத்தைச் செய்தேன்—என்று சொல்லப்பட்டிருக்கிறது. பகவன்னுமபோதேந்த்ரர் தனது குருவான ஆத்ம போதேந்த்ரர் என்ற விச்வாதிகேந்த்ர ஸரஸ்வதியைத் தனது எல்லா க்ரந்தங்களிலும் நமஸ்கரிக்கின்றார்.

विज्ञानवैराग्यपरात्मभक्तिशमादिभिर्योऽधिकतां प्रपन्नः ।
विश्वाधिकाख्यामगमच्च तेन गुरूत्तमं तं प्रणमामि मूर्ध्ना ॥

என்று நாமாம்ருத ரஸாயனத்திலும்,

यस्य नामापि सर्वस्मादुत्कर्षं ख्यापयत्यहो ।
विश्वाधिकगुरोः पादपद्मं वन्दे मुदा सदा ॥

என்று ஹரிஹராத்வைத பூஷணத்திலும், எல்லா குணங்களாலும் உலகத்திலேயே பெரியவர் அத

ஞலேயே விச்வாதிகர் என்ற பெயர் பெற்றவர் என்று குருவைப் புகழ்ந்து பேசுகிருர்.

அத்வைத பூஷணம் என்கிற ஸூத்ர பாஷ்ய வ்யாக்யானத்தில் போதேந்த்ரர் தனது குரு கீர்வாணேந்த்ரர் என்று,

गीर्वाणेन्द्रयतीन्द्राणां चरणांबुरुहद्वयम् ।

स्वर्गापवर्गदं पुंसां नौमि विघ्नौघशान्तये ॥

என்ற ச்லோகத்தால் கூறுகிருர். அந்த குரு வித்யா குரு என்று அறியலாம். அல்லது

अद्वैतपीठस्थितदेशिकं तं ह्यात्मविद्याविशदान्तरङ्गम् ।

नित्यं भजामो विशदस्वरूपं गीर्वाणयोगीन्द्रगुरुं हृदन्तः ॥

என்று போதேந்த்ரரே தான் எழுதிய ஆத்மபோத டீகையில் தனது குருவான கீர்வாணயோகீந்த்ரர் ஜகத்குரு பீடத்தில் இருப்பதாகக் கூறுகிறபடியால் அவரது குருவாயும் விச்வாதிகேந்த்ரஸரஸ்வதி என்ற பெயருடையவராயும் காமகோடி பீடத்தில் 58-ஆவது பீடாதிபதியாயும் இருப்பவரான குருவிற்கே கீர்வா ணேந்த்ரஸரஸ்வதி என்ற மற்ருெரு பெயர் இருப்ப தாயும் அந்தப் பெயரால் போதேந்த்ரர் குருவை வணங்குகிருர் என்றும் கூறலாம்.

ஸூக்ஷமாகாரர் புண்ய ச்லோக மஞ்ஜரீபரி சிஷ்டத்தில்,

वृद्धाचलप्रभवविश्वमखीन्द्रसूनु-

विश्वेश्वरः परशिवार्यपदं प्रपन्नः ।

आसेतुशीतगिरि कल्पितजैत्रयात्रः
आद्यात् स शंकरगुरोरतिहृद्य आसीत् ॥
विश्वाधिकस्वधिषणत्वत एनमाहु-
र्विश्वाधिकेन्द्रमनघा नवशंकरं च ।
श्रीरुद्रभाष्यमुखभूरितरप्रबन्ध-
संधानकौशलममुष्य किमप्यमेयम् ॥

'வ்ருத்தாசலத்தில் பிறந்தவர், விச்வதீக்ஷிதரின் புத்ரர் விச்வேச்வரர் என்று பூர்வாச்ரம நாமாவை யுடையவர், பரமசிவேந்த்ரருடைய ஸ்தானத்தில் வந்தவர், ஸேது முதல் ஹிமாசலம் வரை விஜய யாத்ரை செய்தவர், உலகத்தில் எல்லாரையும்விட அதிகமான புத்தியையுடையவராதலால் விச்வாதிகர் என்று பெயர் பெற்றவர், இவருக்கு அபினவ சங்கரர் என்றும் பெயர், ஸ்ரீருத்ரத்திற்கு பாஷ்யம் செய்தவர்' என்று போதேந்த்ரரின் குருவான விச்வாதிக குருவைக் கூறியிருக்கிறார்.

श्रीशंकराचार्यनवावतारं विश्वेश्वरं विश्वगुरुं प्रणम्य ।
वेदान्तशास्त्रश्रवणालसानां बोधाय कुर्वे कमपि प्रयत्नम् ॥

'ஜகத்குருவாயும் ஸ்ரீ சங்கராசார்யருடைய மறு அவதாரமாயும் இருக்கும் விச்வேச்வர ஸரஸ்வதி என்ற குருவை நமஸ்கரித்து பாஷ்யம் முதலிய வேதாந்த சாஸ்த்ரங்களைப் படிக்க சோம்பல் உள்ளவர்களுக்கு ஸுலபமாக போதம் ஏற்படுவதற்காக ஸித்தாந்த பிந்து என்ற தசச்லோகியின் வ்யாக்யான

மான க்ரந்தத்தைஎழுதுகிறேன்' என்று மதுஸூதன ஸரஸ்வதீ ஸித்தாந்தபிந்துவென்கிற க்ரந்தத்திஞரம்பத்தில் கூறியிருக்கிருர். அங்கு ஜகத்குருவென்றும் அபினவ சங்கரர் என்றும் கூறப்பட்ட விச்வேச்வர ஸரஸ்வதீ காமகோடி பீடத்தில் உள்ள நவசங்கரர் என்றும் போதேந்த்ரரின் குருவென்றும் கூறப்பட்ட 58-ஆவது பீடாதிபதியான விச்வாதிகேந்த்ர ஸரஸ்வதியாயிருக்கலாம் என்று தோன்றுகிறது. அவருக்குப் பூர்வாச்ரமத்தில் விச்வேச்வரர் என்று பெயர் இருப்பதால் விச்வேச்வர ஸரஸ்வதீ என்றும் பெயர் பொருந்தும். அவர் ஆஸேதுஹிமாசலம் ஸஞ்சாரம் செய்தபடியால் அவரிடம் மதுஸூதன ஸரஸ்வதீ குருபாவத்தை ஏற்படுத்திக்கொள்ள இடமிருக்கிறது.

இங்கு ஓர் ஸந்தேஹம் வாசகர்களுக்கு ஏற்படலாம். அத்வைத ஸித்தி என்கிற க்ரந்தத்தில், श्रीरामविश्वेश्वरमाधवानाम्' என்கிற ச்லோகத்தில் மதுஸூதன ஸரஸ்வதீ மூன்று குருக்களை நமஸ்கரிக்கின்ருர். அவ்விடத்தில் ப்ரம்மானந்த ஸரஸ்வதீ தான் இயற்றிய லகுசந்த்ரிகை என்னும் வ்யாக்யானத்தில், 'परमगुरुगुरुविद्यागुरून् प्रणमति—श्रीरामेत्यादि' என்று எழுதியிருக்கிருர். இதனுல் ஸ்ரீராம ஸரஸ்வதீ பரமகுருவென்று தெரிகிறது. விச்வேச்வரரே விச்வாதிகர் என்பவர் என்று கூறினுல் பரமசிவேந்த்ரர் தானே பரமகுருவாக வேணும். ஸ்ரீராம ஸரஸ்வதீ எப்படி மதுஸூதன ஸரஸ்வதிக்குப் பரமகுருவாக முடியும்? இதற்கு ஸமாதானம்

வருமாறு—பரமசிவேந்த்ரர் பரமசிவனிடத்திலும் ராமனிடத்திலும் துல்ய பக்தியுள்ளவர். ராமனுக்குப் பரமசிவன் உபதேசித்த கீதையாகிய சிவ கீதைக்குப் பரமசிவேந்த்ரர் வ்யாக்யானம் தாத்பர்ய ப்ரகாசிகை என்று எழுதியிருக்கிறார். அதில் ராமன் ஈசுவரனே, லீலையாக மனுஷ்ய ரூபம் எடுத்ததில் லோக ஸங்க்ரஹார்த்தமாக லீலையாகவே சிவபூஜை முதலியதைச் செய்கிறார் என்று கூறியிருக்கிறார். க்ரந்தாரம்பத்தில்,

नत्वा सर्वगुरुं सांबं लीलामानुषविग्रहम् ।
रामं च शिवगीतायास्तात्पर्यं वर्ण्यते मया ॥

என்ற ச்லோகத்திலும் 'ஸாம்ப பரமேச்வரனையும் லீலையாக மனுஷ்யாவதாரம் எடுத்த ராமனையும் வணங்கி சிவகீதையின் தாத்பர்யத்தை விளக்குகிறேன்' என்று சொல்லுகிறார். ஆகையால் சிவன் ராமன் இருவரிடத்திலும் பக்தியுள்ள பரமசிவேந்த்ரருக்கு ஸ்ரீ ராம ஸரஸ்வதீ என்ற பெயர் இருப்பதில் ஆக்ஷேபமில்லை. இவருக்குப் பூர்வாச்ரமத்தில் சிவராம க்ருஷ்ணன் என்று பெயர். அதனாலும் பரமசிவேந்த்ரர் என்பது போல ஸ்ரீராம ஸரஸ்வதீ என்றும் பெயர் வருவது பொறுத்தமே. பரமசிவேந்த்ரருடைய புண்ய ச்லோகம் புண்ய ச்லோக மஞ்ஜரீ பரிசிஷ்டத்தில் ஸூக்ஷ்மாகாரரால் கூறப்பட்டிருக்கிறது.

'पंपासरस्तटभुवः परमेश्वरस्य पुत्रस्सदाशिवरतश्शिवरामकृष्णः ।
तस्मादवाप्य नियमं नियमी निरस्तसंगोऽध्युवास सदनं खलु कामनेत्र्याः॥

என்று. இதில் பரமசிவேந்த்ரர் பூர்வாச்ரமத்தில் சிவராமக்ருஷ்ணன் என்று பெயருள்ளவர் ஸதாசிவ போதேந்த்ரரிடத்தில் ஸன்யாஸம்பெற்றுக் காம கோடி பீடத்தில் இருந்தார் என்று கூறப்பட்டிருக் கிறது. ஆகையால் பகவன்னுமபோதேந்த்ரருக்கு முந்தி விச்வாதிகரிடம் மதுஸூதனர் ஸன்யாஸம் பெற்றூர் என்று தெரிகிறது.

போதேந்தர் தனது நாமாம்ருத ரஸோதயத்தில் அத்வைத ஸித்திகாரரான மதுஸூதன ஸரஸ்வதீ இயற்றிய கீதா கூடார்த்ததீபிகையை உதா ஹரிப்பதால் மதுஸூதனஸரஸ்வதிக்குப் பிறகு போதேந்த்ரர் விச்வாதிகரிடம் ஸன்யாஸம் பெற்றூர் என்று தெரிகிறது. இதே மாதிரி போதேந்த்ரர் நாமாம்ருதரஸாயனம் என்ற க்ரந்தத்தில் ஸித்தாந்த ஸித்தாஞ்ஜனகாரரான க்ருஷ்ணனந்த ஸரஸ்வதீ இயற்றிய புருஷார்த்த ரத்னகரத்திலுள்ள நாம தரங்கத்தை உதாஹரிக்கிறூர். அதனுல் அவர் க்ருஷ்ணனந்த ஸரஸ்வதிக்குப்பிற்பட்டவர் என்று தெரிகிறது.

பரமசிவேந்த்ரர் தான் எழுதிய 'दहरविद्याप्रकाशिका' என்ற க்ரந்தத்தின் முடிவில்,

एषा त्र्यंबकमखिनः श्रीरामेन्द्रस्य वरदराजस्य ।
शङ्करनारायणमखिवरस्य चाभ्यर्थनावशाद्रचिता ॥

என்ற ச்லோகத்தில் த்ர்யம்பகமகி, ஸ்ரீராமேந்த்ரர், வரதராஜர், சங்கரநாராயணமகி இவர்களுடைய ப்ரார்த்தனையினுல் தஹரவித்யாப்ரகாசிகை

தம்மால் எழுதப்பட்டது என்று சொல்லுகிறுர். ஆகையால் பரமசிவேந்த்ரர் த்ர்யம்பகமகி முதலியவர்களுடைய காலத்திலிருந்தவரென்று தெரிகிறது. தஹரவித்யாப்ரகாசிகையிலும் சிவகீதா வ்யாக்யானமான தாத்பர்ய ப்ரகாசிகையிலும் அப்பய்ய தீக்ஷிதர் இயற்றிய ஆத்மார்பண ஸ்துதியை உதாஹரிக்கிறபடியால் பரமசிவேந்தரர் அப்பய்ய தீக்ஷிதருக்குப் பிற்பட்டவரென்று தெரிகிறது.

பரமசிவேந்த்ரர் சிவகீதாதாத்பர்ய ப்ரகாசிகையில்—3-ஆவது அத்யாயத்தின் வ்யாக்யானுவஸரத்தில், '**व्यतिहारस्य प्रयोजनमुक्तम् अस्मद्गुरुचरणैः पञ्चीकरणभावप्रकाशिकायाम्**' 'ப்ரஹ்மைவாஹமஸ்மி அஹம்ப்ரஹ்மாஸ்மி' என்று இரண்டு தடவை மாறிமாறி அனுஸந்தானம் செய்வதின் ப்ரயோஜனம் தமது குருசரணுளினுல் பஞ்சீகரணபாவ ப்ரகாசிகை என்னும் க்ரந்தத்தில் கூறப்பட்டிருக்கிறது என்பதாகச் சொல்லுகிறுர். அந்த குரு யார் என்று விசாரிக்க வேண்டும்.

பகவத்பாதாள் இயற்றிய பஞ்சீகரண க்ரந்தத்திற்கு ஸுரேச்வராசார்யாள் வார்த்திகம் செய்திருக்கிறுர்கள். அந்த வார்த்திகத்திற்கு வார்த்திகாபரணம் என்ற வ்யாக்யானம் நாராயணேந்த்ர ஸரஸ்வதீ என்பவர் இயற்றியிருக்கிறுர். அவர் வார்த்திகாபரணத்தில், '**प्रपञ्चस्तु पञ्चीकरणभावप्रकाशिकायां द्रष्टव्यः**' என்று கூறுகிறுர். இதனுல் நாராயணேந்த்ர ஸரஸ்வதியே பஞ்சீகரணபாவ ப்ரகாசிகை

யும் இயற்றியிருக்கிருர் என்றும், அவர் பரம சிவேந்த்ரருக்கு குரு என்றும் தெரிகிறது. இதனுல் காமகோடி பீடத்தில் 56-ஆவது பீடாதிபதியாக இருந்த ஸர்வஜ்ஞ ஸதாசிவ போதேந்த்ர ஸரஸ்வதி 57-ஆவது பீடாதிபதியான பரமசிவேந்த்ரருக்கு ஸன்யாஸ குருவென்றும் நாராயணேந்த்ர ஸரஸ்வதீ வித்யா குருவென்றும் தெரிகிறது. அத்வைத ஸித்திகாரரான மதுஸூதன ஸரஸ்வதிக்கு விச்வேச்வர ஸரஸ்வதீ ஸந்யாஸ குரு, மாதவ ஸரஸ்வதீ வித்யா குருவென்று ப்ரஹ்மானந்த ஸரஸ்வதீ கூறியிருக்கிருர். அதுபோல் ஒவ்வொரு ஸன்யாஸிகளுக்கும் ஆச்ரம குரு, வித்யா குரு என்று பல குரு இருப்பதில் ஒருவித ஆக்ஷேபத்துக்கும் இடமில்லே.

இவ்விதம் இருக்க ஓர் விமர்சகர் ஒரு ஸந்யாஸிக்கு இரு குருக்கள் இருக்கமுடியாது என்று ஸ்வயம் ப்ரமித்து விட்டுப் பிறரை ஆக்ஷேபிக்கிருர். அத்வைத தீபிகை இயற்றிய ந்ருஸிம்ஹாச்ரமருக்கு ஜகன்னுதாச்ரமர், கீர்வாணேந்த்ர ஸரஸ்வதீ என்ற இரு குருக்கள் இருந்ததாக அத்வைத தீபிகையிலேயே கூறியிருக்கிறது. ஒன்றையும் ஸரிவர ஆருய்ச்சி செய்யாமலேயே தூஷிக்கலாகாது. பரமசிவேந்த்ரரிடம் ரொம்பவும் பக்தியுள்ளவராக சொல்லிக்கொள்ளும் விமர்சகர், பரமசிவேந்த்ரர் சிவகீதாவ்யாக்யானத்திலும் தஹரவித்யா ப்ரகாசிகையிலும் சிவரஹஸ்யம் ஓர் இதிஹாஸமென்று கூறி அதிலுள்ள பல வாக்யங்களே ப்ரமாணமாகக் கூறியிருக்கும்பொழுது

சிவரஹஸ்யத்தை அப்ரமாணம் என்று கூறி யிருப்பது யுக்தமா என்று விசாரகர்கள் யோசிக்க வேண்டும்.

சிவ கீதா வ்யாக்யானம் இரண்டாவது அத்யாயத்தில் 'अहंकारविवेचनं बहुधा कृतमस्मत्कृते स्वरूपानुसंधाने अहमिति नामव्याख्यानावसरे' 'நம்மால் செய்யப் பட்ட ஸ்வரூபானுஸந்தானம் என்னும் க்ரந்தத்தில் அஹம் என்னும் நாமாவின் வ்யாக்யானவஸரத்தில் பலவிதமாக அஹங்காரத்தின் விவேசனம் செய்யப் பட்டிருக்கிறது' என்று கூறியிருப்பதால் பரம சிவேந்த்ர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் ஸ்வரூபானுஸந் தானம் என்று ஓர் வேதாந்த ப்ரகரண க்ரந்தம் செய்திருப்பதாகத் தெரிகிறது. அந்த க்ரந்தத் தில் வேதாந்தங்களில் கூறப்படும் ஆயிரம் பரமாத்ம நாமாக்களை விவரணம் செய்திருப்பதாகவும் தெரி கிறது.

அதனால்தான் பரம சிவேந்த்ரரின் சிஷ்யரான ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ராள் தான் எழுதிய 36 ச்லோகங்களுள்ள ஆத்மானுஸந்தான ப்ரகரணத் தில் தனது குருவின் வந்தனத்துடன் குரு கூறிய ஆயிரம் வேதாந்த நாமாக்களுள் சில நாமாக்களைக் கூறியிருப்பதாகச் சொல்லுகிறார் :—

श्रीमत्परशिवेन्द्रश्रीदेशिकानां वयं मुदा ।
अद्वैतानन्दमाध्वीकमंघ्रिपद्ममुपास्महे ॥ (2)

श्रीदेशिकोक्तवेदान्तनामसाहस्रमध्यगान् ।

कांश्चिन्नाममणीन् पद्यदामभिर्ग्रथयाम्यहम् ॥ (3)

என்று. ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ராள் எழுதிய ஒவ்வொரு க்ரந்தத்திலும் விடாமல் தனது குருவான பரமசிவேந்த்ராளை ஸ்துதிக்கிறார்.

(1) **नवमणिमाला** - என்ற க்ரந்தத்தில் 9 ச்லோகங்கள். ஒவ்வொரு ச்லோகத்திலும் நான்காவது பாதத்தில் '**परमशिवाचार्यपादमद्राक्षम्**' '**परमशिवेन्द्रं भजामि निस्तन्द्रम्**' '**परमशिवार्यं प्रणौमि गुरुवर्यम्**' என்பதுபோல் கூறிவிட்டு கடைசியில்,

नवमणिमालामेतां गुरुवरचरणारविन्दनुतिरूपाम् ।

धारयति यस्तु कण्ठे स जयति कैवल्यसाम्राज्ये ॥

என்று முடித்திருக்கிறார்.

(2) **आत्मानुसंधानम्**. இதை முன் கூறிவிட்டோம்.

(3) **स्वप्नोदितम्** - இது ஸ்வப்னத்தில் பரமசிவேந்த்ராள் ஸதாசிவ ப்ரஹ்மத்துக்கு அனுக்ரஹித்த ஆத்மநிஷ்டையைப் பற்றிக் கூறுவது; 23 ச்லோகங்கள். ஒவ்வொரு ச்லோகாரம்பத்திலும் '**देशिकानुग्रह**' என்றோ '**देशिकेन्द्रकृपा**' என்றோ கூறப்பட்டிருக்கிறது.

देशिकानुग्रहोदारवेत्रोदस्तमनोग्रहः ।

विजानामि जगत्सर्वमात्ममात्रतयाधुना ॥ (5)

என்பது போன்ற ச்லோகங்கள்.

(4) **स्वानुभूतिप्रकाशिका** - இதில் 11 ச்லோகங்கள்.

गौरीपतिपदभजनक्रकचविद्धनैकविषयपाशोऽहम् ।
देशिकवरकरुणोदितपरजीवात्मैक्यतत्त्वबोधोऽहम् ॥ (1)

என்பது முதலிய ச்லோகங்கள்.

(5) **श्रीदक्षिणामूर्तिध्यानम्,** இதில் 45 ச்லோகங்கள். தக்ஷிணமூர்த்தியை த்யானம் செய்யவேண்டியதற்காக தக்ஷிணமூர்த்தியின் குணங்கள் கூறப்படுகின்றன.

(6) **मनोनियमनम्,** 13 ச்லோகங்கள். இதில் மனதை ஸம்போதனம் செய்து ஹிதம் உபதேசிக்கப்படுகிறது.

(7) **नववर्णरत्नमाला** - 13 ச்லோகங்கள். இது சிவஸ்துதி.

(8) **आत्मविद्याविलासः**—65 ச்லோகங்கள். இதில்.

निरवधिसंसृतिनीरधिनिपतितजनतारणस्फुरन्नौकाम् ।
परमतभेदनघुटिकां परमशिवेन्द्रार्यपादुकां नौमि ॥ (2)

देशिकपरमशिवेन्द्रादेशवशाद्बुद्धदिव्यमहिमाहम् ।
स्वात्मनि विश्रान्तिकृते सरसं प्रस्तौमि किंचिदिदम् ॥ (3)

என்று ஆரம்பத்திலும்,

इति गुरुकरुणापाङ्गादार्याभिर्द्व्यधिकषष्टिसंख्याभिः ।
निरवद्याभिरवोचं निगमशिरस्तंत्रसारभूतार्थम् ॥ (63)

परमशिवेन्द्रश्रीगुरुशिष्येणेत्थं सदाशिवेन्द्रेण ।
रचितेयमात्मविद्याविलासनामा कृतिः पूर्णा ॥ (65)

என்று முடிவிலும் கூறப்பட்டிருக்கிறது. இதில் பரமசிவேந்த்ராளுடைய பாதுகையைப் பூஜித்து விட்டு உபக்ரமித்து ஆத்மவித்யாவிலாஸம் என்கிற க்ரந்தம் 62 ஆர்யாவ்ருத்த ச்லோகங்களால் தன்னுல் கூறப்பட்டது என்று முடிக்கப்பட்டிருக்கிறது.

*(9)* **आत्मविद्याविलासः**—43 ச்லோகங்கள் உள்ளது. இது வஸந்ததிலகாவ்ருத்தத்தினுல் செய்யப்பட்டது. குரு சிஷ்ய ஸம்வாதரூபமான இந்த க்ரந்தத்தில் ஆத்ம தத்வம் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது.

(10) **शिवमानसिकपूजा**, 30 ச்லோகங்கள், அதில் உள்ள ஓர் ச்லோகம் வருமாறு:—

ध्यायामि कथमिव त्वां धीवर्त्मविदूरदिव्यमहिमानम् ।
आवाहनं विभोस्ते देवाग्र्य भवेत् प्रभो कुतस्स्थानात् ॥ (2)

'புத்திக்கெட்டாத உம்மை எப்படி த்யானம் செய்வேன், எங்கிருந்து உம்மை நீர் இல்லாத எந்த இடத்தில் ஆவாஹனம் செய்வேன்.' இது போன்ற ச்லோகங்களால் சந்த்ரமௌளீச்வரரை மானஸிகமாக இதில் பூஜிக்கிருர் ஸதாசிவ ப்ரம்மம்.

(11) **सपर्या पर्यायस्तवः** இது மத்தமயூர வ்ருத்தத்தினுலேற்பட்ட 26 ச்லோகங்கள் உள்ள க்ரந்தம். அதில் ஓர் ச்லோகம் வருமாறு:—

सर्वात्मा सन् योऽसि पुरस्तादपि पश्चात्
ऊर्ध्वं चाधो दक्षिणतश्चोत्तरतश्च ।
तस्यापारानन्तमहिम्नः कथमात्मन्
प्रादक्षिण्यक्रान्तिमहं ते करवाणि ॥ (20)

'எங்குமுள்ளவரும் ஸர்வாத்மகராயுமுள்ள ப்ரபுவை நான் எவ்விதம் ப்ரதக்ஷிணம் செய்வேன்' என்பது முதலிய ச்லோகங்களால் ஸ்துதியினுலேயே பரமேச்வர பூஜையை ஸதாசிவப்ரம்மேந்த்ராள் செய்கிறுர்.

இங்கு ஓர் ஐதிஹ்யமுண்டு. "பரமசிவேந்த்ராள் ஸதாசிவப்ரம்மேந்த்ராளைத் தமக்கு அடுத்த பீடாதிபதியாக்கக் கருதினவர்களாய் ஒரு ஸமயம் தாம் செய்யும் ஸ்ரீ சந்த்ரமௌளீச்வர பூஜையைச் செய்யுமாறு ஸதாசிவப்ரம்மேந்த்ராளை நியமனம் செய்தார். அப்பொழுது மேல் காட்டிய சிவமானஸிகபூஜா ஸ்தோத்ரம் ஸபர்யாபர்யாய ஸ்தவம் என்ற இரு ஸ்தோத்ரங்களையே சந்த்ரமௌளீச்வரபூஜாபர்யாயமாகச் செய்தார். வேறு பாஹ்யமான பூஜையை ஸதாசிவ ப்ரம்மேந்த்ராள் செய்யவில்லை. அது கண்டு பரமசிவேந்த்ராள் ஸதாசிவ ப்ரம்மம் எப்பவும் அந்தர்முகமாகவுள்ளவர், ஆகையால் பீடாதிபத்யத்துக்குறியவரில்லை என்று தெரிந்துகொண்டு ஸதாசிவ ப்ரம்மத்தின் ஸஹபாடியான ஆத்மபோதரைப் பீடாதிபதியாக நியமித்தார் என்று."

(12) जगद्गुरुरत्नमालास्तवः। இது ஆத்ம போதர் என்ற ஸப்ரஹ்மசாரியின் ப்ரார்த்தனையினுல் ஸதா

சிவப்ரம்மம் இயற்றிய பகவத்பாதாள் முதல் தனது குருவான பரமசிவேந்த்ரர் வரையிலுள்ள 57 காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளின் ஸ்தோத்ரம். 87 ச்லோகங்கள் கொண்ட க்ரந்தம். வஸந்தமாலா வ்ருத்தத்தினுல் அமைக்கப்பெற்றது.

இதற்கு ஸுஷமா என்றும், அதற்குமுன் ப்ரபாவிமர்சினீ என்றும் இரு வ்யாக்யானங்கள் உண்டு. குருரத்னமாலை அழகான வ்ருத்தத்தில் ஸரளமாக எழுதப்பட்டது. அதில் முதல் ச்லோகம் வருமாறு:—

यदबोधवशादहं ममेदं तदिहेत्यादिरुदेति भूरिभेदः ।

तदखण्डमनन्तमद्वितीयं परमानन्दमयं पदं श्रयेयम् ॥ (1)

இது லளிதமான நடையில்தான் இருக்கிறது. இதை ஸஹிக்காத விமர்சகர் கூறும் விஷயமாவது:—'ஆத்ம வித்யா விலாஸம் முதலான க்ரந்தங்கள் எழுதி நெரூரில் ஸமாதியடைந்திருக்கும் ஸ்ரீ ஸதாசிவேந்த்ர ஸரஸ்வதீ ஸ்வாமிகளே இதை எழுதினதாகச் சொல்கிறுர்கள். ஆனுல் ஆத்மவித்யா விலாஸம் முதலான க்ரந்தங்களில் உள்ள அதிலளிதமான த்ராக்ஷாபாகமான பாஷாசைலி இந்த க்ரந்தத்தில் கொஞ்சமேனும் காணவில்லை. ஆர்யாவ்ருத்தத்திலிருப்பது ஒன்றுதான் இதற்கும் ஆத்மவித்யாவிலாஸத்திற்கும் ஸமமான அம்சம் என்று. ச்ருங்கேரி மடத்து அபிமானியான பட்ட ஸ்ரீ நாராயண சாஸ்திரிகளே கும்பகோணத்தில் அச்சிட்ட ஸித்தாந்தலேச ஸங்க்ரஹபூமிகையில் குருரத்னமாலை ஸதாசிவ

ப்ரம்மேந்த்ராள் எழுதியதாக ஒப்புக்கொண்டிருக்கிறார். விமர்சகர் அதை நம்பாமல்போனால் போகட்டும். அப்பொழுது எந்த புஸ்தகமும் இன்னாரால் செய்யப்பட்டது என்று நம்பிக்கை இல்லாமல் போய்விடும். அதை விமர்சகர் கவனிப்பதில்லை.

समुद्धृतैस्साधुकथामहाकरात् प्रबन्धकृष्टैर्मणिभिर्महागुणैः ।
सदाशिवब्रह्मकृता सुदृग्धृता स्फुटं समिन्धां गुरुरत्नमालिका ॥

क्व गंभीरा अंभोनिधय इव विद्वद्वरसदा-
शिवब्रह्मेन्द्राणां पटुफणितयः क्वाहमपि तु ।
तदीयांघ्रिद्वंद्वस्मरणतरणीसाह्यवशतो
विशन् व्याख्यामासां सपदि सुषमाख्यां तितनिषे ॥

என்று ஸுஷமாகாரர் க்ரந்தாரம்பத்தில் குருரத்ன மாலை ஸதாசிவ ப்ரம்மத்தினால் எழுதப்பட்டதென்று ஸ்பஷ்டமாகக் கூறியிருக்கிறார். குருரத்ன மாலிகையும் ஆத்மவித்யாவிலாஸம் முதலியதைப் போல் லளிதமாகவே இருக்கிறது. வ்யுத்பத்தி இல்லாதவர்களுக்கு எதுவும் கடினம்தான். ஒருவர் எழுதிய க்ரந்தங்களிலேயே ஒரு க்ரந்தம்போல் மற்ற க்ரந்தத்தின் சைலீ இருப்பதில்லை. இதற்கு பஹு உதாஹரணங்கள் உண்டு. சாஸ்த்ர புஸ்தக ஆராய்ச்சியாளர்களுக்குச் சொல்லவேண்டியதில்லை. குருரத்னமாலையும் ஆத்மவித்யா விலாஸம்போல் ஆர்யாவ்ருத்தம்தான் என்று கூறும் விமர்சகருடைய புத்திசாலித்தனத்தை எப்படி புகழ்கிறது என்று தெரியவில்லை. குருரத்னமாலிகை வஸந்தமாலா

வ்ருத்தம் என்று க்ரந்த முடிவிலேயே கூறி இருக்கிறது. வ்ருத்த வித்யாஸம் தெரியாமலேயே விமர்சனத்துக்குப் புறப்பட்டு விடுகிறார்கள்.

(13) ब्रह्मसूत्रवृत्तिः ब्रह्मतत्त्वप्रकाशिकानाम्नी. (14) योगसुधाकरनामा योगसूत्रवृत्तिः। யோக ஸூத்ரங்களுக்கும் ப்ரம்ம ஸூத்ரங்களுக்கும் விரிவான வ்ருத்தி செய்திருக்கிறார். அங்கும் பரமசிவேந்த்ராளை ஸ்துதிக்கிறார்.

(15) सिद्धान्तकल्पवल्ली, केसरवल्ल्याख्य व्याख्यायुता। அப்பய்ய தீக்ஷிதரியற்றிய ஸித்தாந்தலேசஸங்க்ரஹ க்ரந்தத்திலுள்ள பல மதங்களை ஆர்யா வ்ருத்த ச்லோகங்களால் ஸங்க்ரஹித்து வ்யாக்யானத்துடன் எழுதியிருக்கிறார். அதில்:—

यदपाङ्गितः प्रबोधो भवदुस्स्वप्नावसानकरः।

तमहं परमशिवेन्द्रं वन्दे गुरुमखिलतन्त्रजीवातुम् ॥

'எவருடைய கடாக்ஷத்தினால் ஸம்ஸாரமாகிய கெட்ட ஸ்வப்னம் காணாமல் பண்ணக்கூடிய விழிப்பு ஏற்படுமோ அகில சாஸ்த்ரங்களுக்கும் உஜ்ஜீவகரான அந்த பரமசிவேந்த்ரரை நமஸ்கரிக்கிறேன்' என்று ஆரம்பிக்கிறார்.

இந்த ச்லோகத்திலுள்ள 'अखिलतंत्रजीवातुं' என்ற பதத்துக்குத் தாமே வ்யாக்யானத்தில் 'अखिलानि यानि तन्त्राणि दर्शनानि तेषां जीवातुम् उज्जीवकं-सर्वषां तन्त्राणां परमतात्पर्येण अद्वितीयब्रह्मावसायित्वस्य तत्रतत्र स्वकृतग्रन्थेषु स्थापितत्वात्' 'எல்லா தர்சனங்களுக்கும்

அத்வைத ப்ரம்மத்தில் பரமதாத்பர்யத்தால் பர்யவஸானத்தைத் தனது க்ரந்தங்களில் பல விடங்களில் காட்டியிருக்கிறபடியால் பரமசிவேந்த்ரர் அகில தந்த்ரங்களுக்கும் உஜ்ஜீவகர்' என்று அர்த்தம் கூறியிருப்பதால் பரமசிவேந்த்ரர் பல க்ரந்தங்கள் இயற்றியிருப்பதாக வெளியிடுகிருர்.

सिद्धान्तलेशसंग्रहवर्णितनानामतावधानाय ।
हृद्यैरहं कतिपयैः पद्यैस्सन्दर्भयामि कृतिमेताम् ॥

'அப்பய்ய தீக்ஷிதரியற்றிய ஸித்தாந்தலேச ஸங்க்ரஹத்தில் கூறப்பட்ட பல மதங்களுக்கும் மனதில் அவதானம் ஏற்படுவதற்காக அழகான பத்யங்களால் இந்த க்ரந்தம் நிர்மாணம் செய்கிறேன்' என்று சொல்லுகிருர்.

க்ரந்த முடிவில்,

इत्थं परमशिवेन्द्रानुग्रहभाजनसदाशिवेन्द्रकृतौ ।
सिद्धान्तकल्पवल्लयां तुर्यस्तबकश्च संपूर्णः ॥

'பரமசிவேந்த்ரருடைய அனுக்ரஹ பாத்ரமான ஸதாசிவேந்த்ரர் எழுதிய புஸ்தகத்தில் 4-ஆவது ஸ்தபகம் பூர்த்தியடைந்தது' என்று முடிக்கிருர்.

(16) **कीर्तनानि—(23) गीतिरत्नमाला ।**

(1) भज रे गोपालं मानस। (2) स्मर वारंवारं चेतः स्मर नन्दकुमारम्। (3) ब्रूहि मुकुन्देति रसने। (4) मानस संचर रे ब्रह्मणि। (5) गायति वनमाली मधुरम्। (6) क्रीडति

वनमाली गोष्ठे। (7) भज रे यदुनाथं मानस। (8) भज रे रघुवीरं मानस। (9) कालांभोधरकान्तशरीरं भज वारंवारम्। (10) चेतः श्रीरामं चिन्तय। (11) पिब रे रामरसं रसने। (12) खेलति मम हृदये रामः। (13) खेलति पिण्डाण्डे भगवान्। (14) स्थिरता न हि न हि रे मानस। (15) न हि रे न हि शङ्का काचित्। (16) चिन्ता नास्ति किल तेषाम्। (17) ब्रह्मैवाहं किल गुरुकृपया। (18) सर्वं ब्रह्ममयं रे रे। (19) तद्वज्जीवत्वं ब्रह्मणि। (20) पूर्णबोधोऽहं सदानन्दपूर्णबोधोऽहम्। परमशिवेन्द्र-श्रीगुरुसोमसमुदितनिरवधिनिर्वाणसुखसागरोऽहम्। (21) आनन्द-पूर्णबोधोऽहम्। सततमानन्दपूर्णबोधोऽहम्। (22) आनन्दपूर्ण-बोधोऽहम्। सच्चिदानन्दपूर्णबोधोऽहम्। शिवोऽहम्। धीरपरमशिवेन्द्र-श्रीगुरुबोधितोऽहम्। (23) जय तुङ्गतरङ्गे गङ्गे।

இந்த கீர்த்தனங்களில் பரமஹம்ஸ முத்ரை வைக்கப்பட்டதுடன் பரமசிவேந்த்ரஸ்மரணமும் இருக்கிறது.

(17) **बोधार्यप्रकरणम्.** 150-ச்லோகங்களுக்குமேல் உள்ளது. இந்த க்ரந்தத்தை ஸுஷமாகாரர் ஸதாசிவ ப்ரம்மேந்த்ராள் செய்ததாக குருரத்ன மாலிகை யின் 84-வது ச்லோகவ்யாக்யானத்தில் கூறுகிறார். அந்தச்லோகம் வருமாறு—

अथ मे स सदाशिवः कृषीष्ट प्रथमं बोधप(दे)थेन तत्त्वदेष्टा।
कुशलं कुशलाग्रणीः प्रकामप्रशमोऽप्युज्ज्वलमूर्तिराप्तकामः ॥ (84)

இது பரமசிவேந்த்ராளின் குருவான ஸதாசிவ போதேந்த்ர ஸரஸ்வதீஸ்வாமிகளைப் பற்றிக் கூறுவது. இவ்விடத்தில் ஸுஷமாவ்யாக்யானம்—

'प्रथमम्-आदौ, बोधपदेन-बोध इति नाम्ना, तत्त्वदेष्टा-परमार्थोपदेशकः प्रणतानामिति बोद्धयम्। प्रभाविमर्शन्यां तु 'बोधस्य-तदाख्यस्य आर्यामयस्य वेदान्तप्रकरणस्य। पथा—मार्गेण बोधपथेन बोधार्याद्वारेति यावत्। तत्त्वस्य - परमार्थस्य। देष्टा - बोधकः। प्रवीरसेतुभूपालायेति शेषः। भक्तिदेष्टेत्यपि पाठान्तरम्।' इति दृश्यते। वस्तुतस्तु बोधार्याग्रन्थः स्वपरमगुरुनाम्ना प्रकाशितः सर्वज्ञसदाशिवब्रह्मेन्द्रैरेव निर्मित इति निर्विवादम्' इति।

குருரத்தினமாலைக்கு ஸுஷமாவுக்கு முன் ப்ரபாவிமர்சினி என்று ஓர் வ்யாக்யானம் உள்ளது. அங்கு '**बोधपथेन**' என்று மூல பாடத்தை வைத்துக் கொண்டு. ஸதாசிவபோதேந்த்ரர் என்கிற பரம சிவேந்த்ரருடைய ஆசார்யர் போதார்யா என்கிற தாம் எழுதிய க்ரந்தமுகமாக ப்ரவீர ஸேதுபூபால னுக்கு தத்வோபதேசம் செய்தார் என்று கூறப்பட் டிருக்கிறது. உண்மையாகப் பார்த்தால் போதார்யா ப்ரகரணம் என்கிற க்ரந்தம் ஸதாசிவ ப்ரம்மத் திறல் இயற்றப்பட்டுத் தனது பரம குருவின் பெயரால் வெளியிடப்பட்டது என்பதில் விவாத மில்லை. **बोधापदेन** என்று தான் மூலபாடம். ஸதா சிவருக்கு போதர் என்று பெயர், அத்துடன் கூடி யவர் என்று பொருள் என்று ஸுஷமாகாரர் கூறுகிறுர். இப்பொழுது அந்த க்ரந்தத்திற்கு

ஸ்வாத்மநிரூபணம் என்ற பெயரால் பகவத்பாதாள் செய்த வேதாந்த ப்ரகரண க்ரந்தங்களில் ஒன்றாக ப்ரஸித்தி ஏற்பட்டிருக்கிறது. அவ்விதம் அச்சுப் போட்டிருக்கிறார்கள். உண்மையை விமர்சகர்கள் கண்டுபிடிக்க வேண்டும்.

பரமசிவேந்த்ரருடைய பல சிஷ்யர்களுள் நல்லாகவி என்ற ஒருவருண்டு. அவர் பரிமளம் என்ற வ்யாக்யானத்துடன் அத்வைத ரஸமஞ்ஜரி என்ற 47-ச்லோகங்கள் கொண்ட க்ரந்தம் இயற்றியிருக்கிறார். அவர் பரிமள வ்யாக்யானாரம்பத்தில்,

भुवनाद्भुतानुभावं परमशिवेन्द्राभिधं भजामि गुरुम् ।
यदपाङ्गव्यापारः पुंसां संसारतारको भवति ॥

'எவருடைய கடாக்ஷத்தினால் ஸம்ஸார பந்தம் விலகுமோ, உலகத்தில் அற்புதமான மஹிமை வாய்ந்த அந்த பரமசிவேந்த்ர குருவை பஜிக்கிறேன்' என்று கூறிவிட்டு,

वेदान्तसूत्रवृत्तिप्रणयनसुव्यक्तनैजपाण्डित्यम् ।
वन्देऽवधूतमार्गप्रवर्तकं श्रीसदाशिवब्रह्म ॥

'ப்ரஹ்மஸூத்ரங்களுக்கு வ்ருத்திசெய்ததால் பாண்டித்யத்தை வெளிப்படுத்தியவரும் அவதூத ஸந்யாஸிகள் இருக்கவேண்டிய மார்க்கத்தைக் காட்டியவருமான ஸ்ரீ ஸதாசிவப்ரம்மத்தை நமஸ்கரிக்கின்றேன்' என்று சொல்லுகிறார். இந்த நல்லாகவி என்பவர் ஜீவன்முக்தி கல்யாண நாடகம் முதலிய க்ரந்தங்கள் எழுதியவர். சோள தேசத்தில்

காவேரீ தீரத்திலுள்ளது திருவிசலூர் என்ற க்ராமம். தஞ்சாவூரில் அரசாண்டு வந்த மஹாராஷ்ட்ர வம்சத்தைச் சேர்ந்த ஏகோஜியின் குமாரரான சாஹஜி ராஜனுல் மஹாவித்வான்களான 46 பண்டிதர்களே ஸ்தாபித்து அவர்களுக்கு ஸர்வமான்யமாக அளிக்கப்பட்டது. அதனுல் அவ்வூருக்கு சாஹஜிராஜபுரம் என்று பெயர் ப்ரஸித்தம். அங்கு ஸ்தாபிக்கப்பட்ட பண்டிதர்களுள் ஒருவர்தான் நல்லாகவி என்ற நல்லா சாஸ்த்ரி. அவரோடு பாலக்ருஷ்ணுனந்த ஸரஸ்வதியின் சிஷ்யரும் அவருடைய ஸித்தாந்த ஸித்தாஞ்ஜனம் என்கிற க்ரந்தத்துக்கு ரத்ன தூலிகை என்ற வ்யாக்யானம் எழுதியவருமான பாஸ்கரதீக்ஷிதர், ஜானகீபரிணயம் பதஞ்ஜலி சரிதம் முதலிய க்ரந்தங்கள் இயற்றிய ராமபத்ரதீக்ஷிதர், அத்புததர்பண நாடகம் எழுதிய மஹாதேவகவி, வ்யாஸதாத்பர்ய நிர்ணயம் இயற்றிய அய்யண்ணுவின் குருவும் பல பக்தி க்ரந்தங்கள் இயற்றியவருமான அய்யாவாள் என்ற ஸ்ரீதரவேங்கடேசார்யர், ராமபத்ரதீக்ஷிதரின் சிஷ்யரான மஹாபாஷ்யம் கோபாலக்ருஷ்ணசாஸ்திரிகள் முதலிய பல பிரபல பண்டிதர்களும் உண்டு.

பல யாகங்கள் செய்தவரும் தர்மாகூதம் என்ற ராமாயணவ்யாக்யானம் செய்தவருமான த்ரயம்பகராயமகி என்பவர் சாஹஜி ராஜாவினிடம் மந்த்ரியாயிருந்தவர். அவர் தம்பியான சரபஜீமஹாராஜரின் ராஜ்ய காலத்திலும் அவர் மந்த்ரியாயிருந்திருக்கிருர். இந்த த்ர்யம்பகராய மகியை அய்யாவாள் சாஹேந்த்ர விலாஸம் என்ற சாஹஜிராஜா

வைப் பற்றிய 8 ஸர்க்கங்கள் உள்ள காவ்யத்தில் கூறுகிறார்கள். அது வருமாறு—

शुभैर्गुणैस्त्र्यंबकरायधीरश्रेयानुदर्काव्यभिचारितर्कः ।
दिशान्तविश्रान्तयशा महीन्दोरसेवताभ्यर्णममात्यमौलिः ॥ (6-44.)

त्रियम्बकार्यस्य गुणानुकारी नृसिंहरायस्य तदग्रजस्य ।
आनन्दरायस्तनुभूरमात्यः प्राप्तोऽन्तिकं प्रेमपदं क्षितीन्दोः॥ (6-45.)

என்று. இங்கு த்ரயம்பகராயமகி, அவரது அண்ணுவான ந்ருஸிம்மராயருடைய புத்ரரான ஆனந்தராயமகி இவர்களும் சாஹஜிராஜனிடம் மந்த்ரியாக இருந்ததாக சொல்லப்பட்டிருக்கிறது. த்ரயம்பகராயமகி மந்த்ரியாயிருந்த ஸமயம் அய்யாவாள் பால்ய காலம். ஸதாசிவ ப்ரம்மேந்த்ராளை ஒரு சமயம் சாஹஜீ மஹாராஜா மரியாதை செய்வதற்காக மந்த்ரி முகமாக அழைத்தபோது,

अशीमहि वयं भैक्षमाशावासो वसीमहि ।
शयीमहि महीपृष्ठे कुर्वीमहि किमीश्वरैः ॥

'நாம் பிக்ஷான்னத்தை புஜிக்கின்றோம், திகம்பரர்களாக இருக்கின்றோம், பூமியில் படுக்கிறோம், அப்படிப்பட்ட நமக்கு ராஜாக்களுடைய உபகாரம் தேவை இல்லை,' என்று பதில் அனுப்பிவிட்டதாக ஐதிஹ்யம். ஸதாசிவ ப்ரம்மேந்த்ராள் யோகாப்யாஸ பலத்தால் பகுகாலம் ஜீவித்திருந்ததாகத் தெரிகிறது. சரபோஜி மஹாராஜாவின் ஆஸ்தான பண்டிதராயிருந்த மல்லாரி பண்டிதேந்த்ரர்

தீபாம்பாபுரத்திலிருந்து சரபோஜி மஹாராஜா வுக்கு எழுதிய ஸம்ஸ்கிருத கடிதத்தில்,

सदाशिवब्रह्मरूपं ब्रह्माद्राक्षं चिरेप्सितम् ।
प्रणम्य प्रार्थितास्ते हि महाराजकृते मया ॥

पुत्रोत्पत्तौ झटित्यत्र प्रसादः क्रियतामिति ।
संज्ञयाऽसूचयन् पुत्रो भविता ह्यचिरादिति ॥

आत्मविद्याविलासाख्यः स्वीयो ग्रन्थः प्रसादितः ।
युष्माकं भूयसे भाविश्रेयसे कारिता मया ।
भिक्षास्तिस्रस्तत्प्रसादात् पुत्रसंपत्तिरुत्तमा ।

जातेयमिति चाश्रौषं श्रीमतां भवतामिह ॥
महत्प्रसादचिह्नानि श्रेयांसीति वदन्ति हि ।

'ஸதாசிவ ப்ரஹ்மத்தைப் பார்த்தேன்; மஹா ராஜாவுக்குப் புத்ரன் உண்டாகும்படி அனுக்ரஹிக்க வேணுமென்று ப்ரார்த்தித்தேன்; அதற்கு அவாள் ஸம்ஜ்ஞையினுல் சீக்ரம் புத்ரன் உண்டாவான் என்று ஸூசிப்பித்தார்கள்; ஆத்மவித்யாவிலாஸம் என்ற தனது புஸ்தகத்தை ப்ரஸாதமாகக் கொடுத் தார்கள்; தங்களுக்கு ச்ரேயஸ்ஸுகள் ஏற்படு வதற்காக மூன்று பிக்ஷைகள் அவாளுக்கு ஏற்படுத் தினேன்; அவாளுடைய அனுக்ரஹத்திஞல் தங்களுக் குப் புத்ரலாபம் ஏற்பட்டதாகப் பிறகு கேள்விபட் டேன்; பெரியவாளுடைய ப்ரஸாதம் ச்ரேயஸ்ஸைக் கொடுக்குமென்பதில் ஆக்ஷேபமில்லை' என்று

எழுதப்பட்டிருந்தது. இந்த கடிதம் தஞ்சாவூர் ஸரஸ்வதீமஹாலிலுள்ள சுவடி ஒன்றில் காணப்படுகிறது.

ஸதாசிவ ப்ரம்மேந்த்ராள் ஜீவன்முக்தர். மஹா யோகி. இவர் யோகபலத்தால் செய்த அற்புத நிகழ்ச்சிகள் பல. அவைகள் கர்ணபரம்பரையாகக் கேட்கப்பட்டதுகள். அவைகளை ச்ருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபினவந்ருஸிம்ம பாரதீ ஸ்வாமிகள் அவர்கள் தாம் செய்த ஸதாசிவேந்த்ர ஸ்தவம் என்ற 45 ச்லோகங்கள் கொண்ட க்ரந்தத்தில் வெளியிட்டிருக்கிறார்கள். அதில் பெரும்பாலும் '**प्रणतिं कुर्मस्सदाशिवेन्द्राय**' என்றே 4-ஆவது அடி வரும். அவாளே ஸதாசிவேந்த்ர பஞ்சரத்ன ஸ்தோத்ரமும் செய்திருக்கிறார்கள். அதிலும் ஸதாசிவேந்த்ராளுடைய மஹிமையை வர்ணித்திருக்கிறார்கள். புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்தில் அக்காலத்தில் விளங்கிய மன்னனும் ஸதாசிவப்ரம்மத்தை உபாஸித்து அவாளுடைய அனுக்ரஹம் பெற்றது ஜகத்ப்ரஸித்தமான விஷயம்.

க்காஞ்சீ காமகோடி பீடத்தில் 57-ஆவது பீடாதிபதியாக விளங்கிய பரமசிவேந்த்ராளின் ஸமாதி திருவெண்காடு என்ற மஹாக்ஷேத்ரத்தில் இருக்கிறது. அவாளுடைய சிஷ்யரான ஸதாசிவப்ரம்மத்தினுடைய ஸமாதி நெரூரில் விளங்குகிறது. இந்த மஹானை ச்ருங்கேரி பீடத்திலிருந்த பெரியோர்களும் கொண்டாடியிருக்கிறார்கள். இவருடைய குரு பரமசிவேந்த்ரர் காமகோடி பீடத்திலிருந்ததாக ப்ரபலப் ப்ரமாணங்களால் முன் காட்டப்பட்டது. இவ்விதம்

வஸ்துஸ்திதியிருக்க காமகோடி பீடத்தின் மஹிமையை ஸஹிக்காத சிலர்கள் ஸதாசிவ ப்ரம்மத்தின் குருவான பரமசிவேந்த்ரர் வேறு, காமகோடி பீடத்தில் இருந்த பரமசிவேந்த்ரர் வேறு என்று தாமாக ஓர் கல்பனையைச் செய்து கொண்டு ஆத்மத்ருப்தியை அடைகிறார்கள். பிறருக்கும் போதிக்கிறார்கள். அவர்கள் சொல்லும் காரணங்கள் மேலே காட்டியவாறு ஸரியான காரணங்களாக ஆகாதபடியாலும் நாம் காட்டிய ப்ரபலப்ரமாணங்கள் ஸதாசிவப்ரம்மத்தின் குரு காமகோடி பீடத்திலிருந்ததாகக் காட்டுகிறபடியாலும் பலமஹான்கள் அலங்கரித்த காமகோடி பீடத்தின் மஹிமையை நன்கு உணர்ந்து பக்திபண்ணி ஆத்மலாபத்தையும் ஐஹிக ஆமுஷ்மிக ஸர்வாபீஷ்டங்களையும் மஹாஜனங்கள் அடையுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

இங்கு முக்கியமாக கவனிக்கவேண்டிய ஓர் விஷயம் வருமாறு :—பகவந்நாம போதந்த்ரரின் குருவாயும், 58 ஆவது காமகோடி பீடாதிபதியாயும், ஸதாசிவப்ரஹ்மத்தின் ஸஹபாடியாயும் உள்ள ஆத்மபோதேந்த்ரர்என்ற விச்வாதிகேந்த்ரஸரஸ்வதீ, அபிநவசங்கரர் என்ற பிருது உள்ளவர் என்றும், அவரே ஸ்ரீருத்ரத்திற்கு ஓர் உயர்ந்த பாஷ்யம் செய்தவர் என்றும் முன்பு கூறியிருக்கிறோம். இவ்விடத்தில் ஓர் விமர்சகர் பகவத்கீதைக்கு ப்ரஹ்மாநந்தகிரி என்னும் வ்யாக்யானம் எழுதிய வேங்கடநாதர் என்பவரின் குருவான ராமப்ரம்மாநந்த தீர்த்தர்தான் ஸ்ரீருத்ரபாஷ்யம் எழுதியவர். அவருக்கு அபிநவ சங்கரர் என்று பெயர் உண்டு. போதேந்த்ர

ரின் குருவானவர் ஸ்ரீருத்ரபாஷ்யம் இயற்றவில்லை என்று கூறுகிறார். அதற்கு பதில் கூறுவோம்.

நவசங்கரர் என்று மதுஸூதனஸரஸ்வதியால் கூறப்பட்டவரான விச்வேச்வரஸரஸ்வதி என்ற விச்வாதிகஸரஸ்வதிதான் போதேந்த்ரரின் குருவென்றும், அவரே நவசங்கரர் என்றும் அவர் ஸ்ரீருத்ரபாஷ்யம் இயற்றியிருக்கிறாரென்றும் முன் ஸுஷமாகாரரின் புண்யச்லோகமஞ்சரீபரிசிஷ்டம் என்கிற க்ரந்த ப்ரமாணத்துடன் கூறியிருக்கிறோம். அவரே, தான் இயற்றிய ஸ்ரீருத்ரபாஷ்யத்தில் '**तानि (वचनानि) सर्वाण्यपि अस्माभिः पाषण्डगजकेसरिणि उदाहृतानि**' என்ற வாக்யத்தால்தான் பாஷண்டகஜகேஸரி என்னும் க்ரந்தமும் இயற்றியிருப்பதாகக் கூறியிருக்கிறார்.

வேங்கடநாதரின் குருவான ராமப்ரம்மத்திற்கும் அபிநவசங்கரர் என்ற பிருது இருக்கலாம். அதனால் அவரே ருத்ரபாஷ்யம் இயற்றியவர் என்று ஆகாது. சிவகீதாதாத்பர்யப்ரகாசிகை, தஹரவித்யாப்ரகாசிகை முதலியக்ரந்தத்தில் சிவோத்கர்ஷத்தை விளக்கின பரம சிவேந்த்ராளின் சிஷ்யரானபடியாலேதான் விச்வாதிகர் என்ற அபிநவசங்கரர் ஸ்ரீருத்ர பாஷ்யத்தில் சிவோத்கர்ஷத்தை நன்கு விளக்கியுள்ளார் என்று ஊஹிக்க இடமுண்டு. ப்ரம்மாநந்தகிரி என்னும் பகவத்கீதாவ்யாக்யானத்தில் வேங்கடநாதர் '**पाषण्डगजकेसरिण्यस्माभिः प्रपञ्चितम्**' என்று தானும் ஓர் பாஷண்டகஜகேஸரி என்ற நூல் இயற்றியிருப்பதாகக் கூறுகிறார். பாஷண்டகஜகேஸரி என்ற ஒரேபெயர் பலருடைய க்ரந்தங்களுக்கு இருப்பதுபோல் அபிநவசங்கரர் என்ற

ஒரேபெயரும் பலருக்கு இருக்கலாம். அதை மாத்திரம் வைத்துக்கொண்டு ப்ரமாணக்ரந்தங்களில் கூறப்பட்டதை ஆக்ஷேபிப்பது சரியல்ல என்பதை வாசகர்கள் அறியவும்.

யோகியான ஸதாசிவப்ரும்ஹத்தின் குருவான பரமசிவேந்த்ரருக்கு யோகீந்த்ரர் என்ற பெயர் ப்ரஸித்தம். பரமசிவேந்த்ரரின் சிஷ்யரான நல்லாகவிதான் எழுதிய அத்வைத ரஸமஞ்சரியில் இதைக் கூறியிருக்கிறார். ஸ்ரீ ருத்ரபாஷ்யம் எழுதியவரும் தனது குரு யோகீந்த்ரர் என்று ஆரம்பத்தில் கூறுகிறார். ஆகையால் பரமசிவேந்த்ரரின் சிஷ்யரான விச்வாதிகர் என்ற நவசங்கரரே ருத்ரபாஷ்யம் எழுதியவர் என்று ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

தர்க்கத்தில் பாண்டித்யம் பெற்றுப் பிறகு வெகுகாலம் பாடமும் போதித்துவந்த மற்றொரு ஆராய்ச்சியாளர், 'பரமசிவேந்த்ரர் எந்தபீடத்திலும் இருந்தவரல்ல, எந்த மடத்தின் ஸம்பந்தமுமற்றவர். இவருக்குப் பரமசிவேந்த்ரர் என்றும், இவரது சிஷ்யராகிய தனக்கு ஸதாசிவேந்த்ரர் என்னும் பெயர் ஸதாசிவப்ரம்மேந்த்ரராலேயே தனது க்ரந்தங்களில் குறிக்கப்பட்டிருக்கிறது. பரமசிவேந்த்ரஸரஸ்வதி ஸதாசிவேந்த்ரஸரஸ்வதியென்று பெயர் குறிக்கப்படவில்லை. அவ்விதமிருக்க சிலர் பரமசிவேந்த்ர ஸரஸ்வதி, ஸதாசிவேந்த்ரஸரஸ்வதி என்று பெயரைக் கூறிக்கொண்டு, அவர்களுக்குத் தமது காஞ்சீ மடத்தில் ஸம்பந்தம் கல்பிப்பது ஸரியாகாது' என்று ஆராய்ச்சிசெய்து வெளியிட்டிருக்கிறார். அவருக்கு

நாம் கூறுவது என்னவென்றால் ஸதாசிவப்ரம்மத்தின் குரு பரமசிவேந்த்ரர் என்பதில் ஆக்ஷேபமில்லை. அந்த பரமசிவேந்த்ரர் காஞ்சீ காமகோடிபீடத்தில் 56-ஆவது பீடாதிபதியாக இருந்தாரென்று ஸதாசிவப்ரம்மேந்த்ரர் எழுதிய குருரத்னமாலை, ஸுஷமா என்னும் அதன் வ்யாக்யானம் முதலியதில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தக்ரந்தங்கள் பழைமையாயுள்ள க்ரந்தங்கள். இன்றுநேற்று ஏற்பட்டவையில்லை. இந்த்ர, ஸரஸ்வதீ என்ற இருபதங்கள் காமகோடிபீடத்தில் இருந்தவர்களாயும், பீடத்தில் இல்லாதவர்களாயுமுள்ள சிற்சில ஸந்யாஸிகளின் ஸம்ப்ரதாயமான பிருதுகள். அந்த இந்த்ர, ஸரஸ்வதி என்ற இருபதங்களையும் விட்டுவிட்டோ, அல்லது, ஸரஸ்வதீ என்ற பதத்தை மாத்திரம் விட்டுவிட்டோ, ஸந்யாஸிகளின் பெயர்களை வ்யவஹரிப்பது முண்டு. அதனால் அவர்கள் 'இந்த்ரஸரஸ்வதிகள்' அல்ல என்று ஆகிவிடாது. மதுஸூதனஸரஸ்வதி தனது பெயரை 'मुनिना मधुसूदनेन' என்றும், தனதுகுரு, பரமகுரு, வித்யாகுருக்களின் பெயர்களை 'श्रीरामविश्वेश्वरमाधवानाम्' என்றும் அத்வைதஸித்தி, ஸிந்தாந்தபிந்து என்ற க்ரந்தங்களில் ஸரஸ்வதீபத்தை விட்டு விட்டுக் கூறுகிறார். அதனால் மதுஸூதனர் முதலியோர் ஸரஸ்வதீயன்று என்று கூறிவிட முடியுமா? ப்ரம்மாநந்தர், லகுசந்திரிகையிலும், பிந்து டீகையிலும் 'ब्रह्मानन्देन भिक्षुणा' என்று தன்னைக் கூறுகிறார். அதனால் அவர், ப்ரம்மாநந்த ஸரஸ்வதீயல்ல என்று கூறிவிட முடியுமா? போதேந்த்ரர் தனது குருவை 'विश्वाधिकगुरुः' என்றே குறிப்பிடுகிறார். ஆனாலும்

அவர் விச்வாதிகேந்த்ர ஸரஸ்வதியே. பரமசிவேந்த்ரரை, ஸதாசிவப்ரம்மேந்த்ரர் 'परमशिवार्यम्, परमशिवाचार्यपादम्' என்று நவமணி மாலையில் கூறுகிறார். நல்லாகவி என்பவர் அத்வைதரஸமஞ்சரியின் வ்யாக்யானத்தில் ஸதாசிவேந்த்ரரை 'श्रीसदाशिवब्रह्म' என்று கூறுகிறார். இதனால் பரமசிவரும், ஸதாசிவரும், இந்த்ரர்களன்று என்று கூறிவிடலாமா? ஆகையால் சொந்த விருப்பு வெறுப்புகளை வைத்துக் கொண்டு பரிசீலனை செய்பவர்கள் ஹேத்வாபாஸங்களை ஸத்ஹேதுக்கள் மாதிரிகூறுவது தவறாகும்.

மேலே சொன்ன ஆராய்ச்சியை வெளியிட்ட (ஸதாசிவவிஜயம்) என்ற நூலிலேயே 27-ஆம் பக்கத்தில், ஸ்ரீ ஸதாசிவப்ரம்மேந்த்ர ஸரஸ்வதீஸ்வாமிகள், என்றும், 60-ஆம் பக்கத்தில் 'ஸ்ரீ பரமசிவேந்த்ர ஸரஸ்வதீ' என்றும் சிஷ்யர் குரு இருவர்களையும் குறிப்பிட்டிருப்பதை வாசகர்கள் கவனித்தால் இவ்வாராய்ச்சி ஸரியானதல்ல என்று தெரியும். ஸதாசிவேந்த்ர ஸ்துதி செய்த ச்ருங்கேரி பீடாதிபதிகளான ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவந்ருஸிம்ஹபாரதீ ஸ்வாமிகள் அவர்களும், ஸதாசிவப்ரம்மத்தின் குருவான பரமசிவேந்த்ரர் காமகோடிபீடத்தில் இருக்கவில்லை, அவர் பீடத்தில் இல்லாத ஸாதாரண ஸந்யாஸி என்று கூறவில்லை. நவீனர்கள் சிலர் தமது போலிவிமர்சங்களை வெளியிடுகிறார்கள். அதனால் உண்மையை மறைக்க முடியாது.

வேறு ஒரு ஆராய்ச்சியாளர் 'ஸ்ரீ ஸதாசிவவேந்த்ரர் காஞ்சீகாமகோடி மடத்தில் எழுந்தருளியிருந்த பரமசிவேந்த்ரரின் சீடரென்று ஒரு கர்ணபரம்பரை

வழங்கிவருகிறது. இதை நானும் சிலகாலம் நம்பிவந்தேன். ஆராய்ந்து பார்க்கையில் இது சரியல்லவென்று தெரியவருகிறது,' என்று கூறுகிறார். ஒருவர் நம்புவதையும், நம்பாமையையும் பொருத்து ஓர் விஷயம், உண்மையாகிறதோ, பொய்யாகிறதோ இல்லை.

இன்னுமொரு ஆராய்ச்சியாளர் 'ஸதாசிவேந்த்ரர் தனது குருவான பரமசிவேந்த்ரரைப் பீடத்தில் இருந்ததாகச் சொல்லவில்லையே. ஆகையால் அவர் பீடாதிபதியன்று,' என்று கூறுகிறார். தானோ தனது குருவோ, பீடாதிபதியாக இருந்தாலும் அதைத் தனது க்ரந்தத்தில் கூறவேண்டிய அவசியமில்லை. ஸுரேச்வரர், பத்மபாதர் முதலியோர் அவ்விதம் க்ரந்தங்களில் கூறவில்லை அவர்கள் அந்தப்பெருமையை வெளியிட விரும்பவில்லை. பீடாதிபதிகளாயுள்ள பல ஸந்யாஸிகள் தாம் பீடாதிபதிகள் என்று கூறிக்கொள்ளாமலேயே க்ரந்தங்கள் இயற்றியிருக்கிறார்கள். உதாரஹணங்கள் பல இருக்கின்றன.

விமர்சகர்கள் மற்றுமோர முக்கியமான ஆராய்ச்சியை வெளியிடுகிறார்கள். 'பரமசிவேந்த்ராள் ஸ்ரீ காஞ்சீமடத்தின் ஸம்பந்தமுள்ள புண்யச்லோகமஞ்ஜரீ க்ரந்தத்தின் ப்ரகாரம் 16-ஆவது நூற்றாண்டில் உள்ளவர்கள் என்று தெரிகிறது. ஸதாசிவப்ரம்மேந்த்ரர்காலம் 18-ஆவது நூற்றாண்டாகும். ஏனெனில் அவர் 18-ஆவது நூற்றாண்டிலுள்ள தஞ்சாவூர் அரசருக்கும், புதுக்கோட்டை மன்னருக்கும் அனுக்ரஹம் புரிந்ததாக சரித்திர ஆராய்ச்சி

மூலம் தெரியவருகிறது. ஆகையால் 18-ஆம் நூற்றுண்டில் உள்ள ஸதாசிவேந்த்ரருக்கு 16-ஆம் நூற்றுண்டில் உள்ள காமகோடி பீடாதிபதியான பரமசிவேந்த்ரர் குருவாக எப்படி ஆகமுடியும்? இதற்கு ஸமாதானம் கூறுவோம். அதற்குமுன் ஆதிசங்கராசார்யாளைப்பற்றிய கால ஆராய்ச்சியில் பலருடைய, பலவிதமான அபிப்ராயங்களைக் கவனிக்கவேண்டும் 'निधिनागेभवह्न्यब्दे विभवे शङ्करोदयः' என்ற ச்லோகத்தால் ஓரிடத்தில் கலி-3889 ஆவது (கி பி. 788) வர்ஷத்தில் ஆசார்யாள் ஜனித்தார்கள் என்று சொல்லியிருக்கிறது. இக்கருத்தையே

'प्रासूत तिष्यशरदामतियातवत्यामेकादशाधिकशतोनचतुस्सहस्र्याम् ।
संवत्सरे विभवनाम्नि शुभे मुहूर्ते राधे सिते शिवगुरोर्गृहिणी दशम्याम्॥

என்ற சங்கரமந்தாரஸௌரபமென்கிற க்ரந்தத்திலுள்ள ச்லோகமும் வெளிப்படுத்துகிறது. இங்கு 111-வர்ஷங்கள் குறைந்த நாலாயிரம் கலிவர்ஷங்கள் சென்றதும், என்று முன்கூறியதையே கூறியிருக்கிறது.

'वर्षेष्वतीतेषु शतेषु षट्सु तिष्येऽवतीर्णं भुवि शङ्करार्यम् ।
शिष्यैश्चतुर्भिस्सहितं शिवादिपारम्परीकावधिमानमामः' ॥

என்று பாஸ்கரராயர் கூறுகிறார். அதில் கலிவர்ஷங்கள் 6001 ஆனபிறகு ஆசார்யாவிர்ப்பாவமென்று கூறப்பட்டிருக்கிறது.

'कल्यादिमे महादेवि सहस्रद्वितयात्परम् । * * * भविष्यति महादेवि शङ्कराख्यो द्विजोत्तमः'॥ என்ற சிவரஹஸ்ய வச

ணத்தில் கலியில் 2000ம் வர்ஷங்கள் ஆனதும் ஆசார்யாவிர்ப்பாவம் என்று கூறப்பட்டிருக்கிறது. 'तिष्ये प्रयात्यनलशेवधिबाणनेत्रे (2593) (கி. மு. 507) यो नन्दने दिनमणावुदगध्वभाजि' என்ற ஓர் ப்ராசீன சங்கரவிஜயச்லோகம் கலி(2593) வர்ஷங்களானதும் ஆசார்யஜனனமென்று கூறுகிறது.

'शरचराब्देऽपि च कलेर्विलिल्ये' என்ற புண்யச்லோக மஞ்சரீவாக்யம் கலி, 2625-ல் ஆசார்யாளின் நிர்யாணத்தைக் கூறுகிறது. அதில் ஆசார்யாளுடைய ஆயுள்காலம், 32 வர்ஷங்களைக்குறைத்தால் கலி 2593ல் (கி. மு. 507) ஆசார்யாவிர்ப்பாவம் என்று முன்கூறியப்ரகாரமே தெரிகிறது.

மற்றொரு ஆராய்ச்சியாளர் கி. பி. முதல் நூற்றாண்டில் ஆசார்ய ஜனனம் என்று கூறுகிறார். இன்னும் பலபேர் பலவிதமாகக் கூறுகின்றனர். எல்லோரும் ஆதிசங்கராசார்யாளின் அவதாரகாலத்திலேயே ஒருவொருக்கொருவர் முரண்பாடான அபிப்ராயம் கொண்டிருக்கின்றனர். ஏதாவது ஒன்றுதான் உண்மையாய் இருக்கமுடியும்; எது உண்மை எது தவறு என்று நிர்ணயிப்பது ச்ரமம் முன்னோர்கள் பெரியோர்களின் ஜனனகாலவிஷயத்தில் அதிக அக்கரையில்லாததால் ஸரியான ஓர் நிர்ணயத்திற்கு ஒத்துவராமல் பல விதமாகக் கூறியிருக்கின்றனர். இதனால் ஒவ்வொருவர் கூறும் சங்கராசார்யர்கள் வெவ்வேறு சங்கராசார்யர்கள் என்று கூறிவிடலாமா? எல்லோரும் ஒரே சங்கராசார்யாளைத்தான் கூறுகிறார்கள் என்பதில் ஒருவருக்கும் அபிப்ராயபேதமிருக்கவில்லை. இருக்கவும்

முடியாது. இதுபோல் காளிதாஸன் முதலான கவி களின் காலநிர்ணயத்திலும் அபிப்ராய பேதங்கள் உள்ளன. இவ்விதமே பல மடங்களில் ஆதி ஆசார் யாளேப்பற்றியும் மற்ற ஆசார்யாளேப்பற்றியும் பலவிதமான கால ஆராய்ச்சிகள் இருந்துகொண்டு வருகிறது. சிற்சிலமடங்களில் முன்னர் தாம் கூறி யதை விட்டுவிட்டுப் புதிது புதிதாகக் காலம், ஸ்ரீமுகம் முதலான விஷயங்களே மாற்றவும் மாற்று கிருர்கள். அதுஎப்படியோ ஆகுக. காலவிஷயத்தை மாற்றினுலும் ஆசார்யாள் வெவ்வேறு என்று இது வரையில் சொன்னவர்களில்லே. இப்படியிருக்க, புது வித ஆராய்ச்சியாளர்கள் காமகோடி பீடத்தின் ஸம் பந்தமுள்ளவர்களாகப் பழைய ப்ரமாணக்ரந்தங் களில் கூறப்பட்ட பரமசிவேந்த்ரர், ஸதாசிவேந்த்ரர் இவர்கள் விஷயத்தில் க்ரந்தங்களிலும், ஆராய்ச்சி களிலும் வெளியாகிற காலமாறுபாடுகளால் அந் தந்த ஆசார்யாள் வெவ்வேறு பரமசிவேந்த்ராள் ஸதாசிவேந்த்ராள் என்று சொல்லத்துணிந்து விட் டார்கள். இதை அனுசரித்து ஆதிசங்கராசார்யாளே யும் வெவ்வேறு என்று சொல்லத்துணியலாம், ஆனுல் அது ஸாஹஸமாகும். ஆகையால் காலவிஷ யத்தில் சரியாகவோ, தப்பாகவோ, மாறுபாடான அபிப்ராயங்கள் பலவிதமாக இருந்தாலும் அதை சரிவரத் தீர்மானிக்கத் தக்க, நம்பத்தக்க ப்ரமாணங் களில்லாமையால் 'காகதந்த' விசாரம் போன்ற அதுவிஷயமான விசாரத்தை விட்டு விட்டு, அந்தந்த காலத்தில் இருந்ததாகக் கூறப்படும் ஆசார்யாள்

விஷயத்தில் மாறுபாடான அபிப்ராயங்களைக் கொள்ளாமலும், வீண்சர்ச்சைகள் மூலம் பொது ஜனங்களின் மனதைக் குழப்பாமலும் காமகோடி பீடாதிபதிகளாயிருந்த ஸ்ரீ பரமசிவேந்த்ராளிடத்திலும், அவரது சிஷ்யரான ஸ்ரீ ஸதாசிவ ப்ரம்மேந்த்ராளிடத்திலும் பக்திவாய்ந்தவர்களாய் ஸகலச்ரேயஸ்களையும் ஸாதுக்கள் அடைவார்களாக.

சுபம்

---

லிபர்டி அச்சகம், சென்னை - 1

